## அ. பரமசிவம்

கல்லூரியில் தமிழ் இலக்கிய இலக்கணங்களை இளங்கலை, முதுகலை பட்டப்படிப்பு மாணவர்களுக்குக் கற்றுக்கொடுத்தவர். பண்பாட்டுத்துறையில் பயின்ற மாணவர்களுக்கு தமிழ்ப்பண்பாடு சாத்திரமும், தோத்திரமும் (சைவம் – வைணவம்) ஆகிய பாடங்களை ஏறத்தாழ இருபது ஆண்டுகளுக்கு மேல் பாடம் நடத்தியவர். இப்பகுதிகளை முறையாக கற்பிக்க வேண்டி பல அறிஞர்களையும் அத்துறை வல்லுநர்களையும் அணுகி ஐயம் திரிபின்றி அறிந்தவர். மேலும் சித்தர் பெருமக்களின் நெறியிலும் ஈடுபாடு கொண்டவர். இவர்தம் 75–ஆம் ஆண்டு நிறைவினை ஒட்டி *சாத்திரமும் தோத்திரமும் – வைணவம்* எனும் நூல் திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் பொருள் உதவி பெற்று வெளிவருகின்றது.

இறைவனிடம் உள்ளபடி அன்புகொள்வது எல்லா உயிர்களிடத்தும் அன்பு கொள்வதுதான், எல்லோரிடத்தும் அன்பு பூண்டு ஒழுகுவதும் எம்பெருமானுக்குச் செய்யும் தொண்டு. அனைவரிடத்தும் கருணை காட்டுவது ஸ்ரீ வைஷ்ணவ தர்மம். வேதாந்த அறிவுப் பொக்கிஷமும் தமிழ் மறை என்ற நாலாயிரத்திவ்விய பிரபந்தமும் கலந்துள்ளமையால் ஸ்ரீ வைஷ்ணவர்களை உபய வேதாந்தி எனக்கூறுவதுண்டு. வேதாந்தமாகிய உயிர் ஒன்று. அதற்கு வடமொழி மறையும், தமிழ் மறையும் ஆகிய இரு உடல்கள். இது ஸ்ரீ வைஷ்ணவர்களின் கொள்கையாகும். "ஓம் நமோ நாராயணாய" என்பது மகாமந்திரம். அனைவரும் வாழப் பணிபுரிவது மந்திரத்தின் உட்பொருள். மனக்கவலையை அறவே விட்டு விடவேண்டும். மனத்தில் கவலைக்கு இடம் கொடுக்காமல் கடவுளுக்கே இடம் கொடுக்க வேண்டும். பகவான் மீதுள்ள நம்பிக்கைக் குறைவுதான் கவலைக்கு காரணம். பக்தி செய்யவேண்டும்; பணிபுரிய வேண்டும். பணியில் அற்பம் என்றும், பெரிது என்றும் வேற்றுமைப்படுத்தக் கூடாது. உண்மையான கைங்கரியத்தில் "நான்" என்ற ஆணவ முனைப்பிற்கே இடம் இல்லை. இறையருளை நம்பிப் பணிபுரிதல் வேண்டும்.

Sathiramum Thothiramum
Vainavam.

# சாத்திரமும் தோத்திரமும்

## வைணவம்

பேராசிரியர். வித்வான். அ. பரமசிவம், எம்.ஏ.,
(தமிழ்ப் பேராசிரியர் ஓய்வு)
அருள்மிகு பழனியாண்டவர் இந்தியப்
பண்பாட்டுக் கல்லூரி, பழனி.)

"அழகப்பர் இல்லம்"
19 – திருவள்ளுவர் சாலை,
சண்முகபுரம், பழனி –624 602,
தமிழ்நாடு.



பழனி பாரமவுண்ட் பதிப்பகம்
57, அண்ணா நகர், பழனி, தமிழ்நாடு.

The author acknowledges with thanks the receipt of grants from **Tirumala Tirupati Devasthanams** for publication of this book under the scheme of religious publications.




முதற்பதிப்பு 2001

விலை: ரூ. 20




நூல் கிடைக்குமிடம்:

**ப. ராஜமனோகர்**, பி.எஸ்சி.,
அழகப்பர் இல்லம்
19, திருவள்ளுவர் சாலை, பழனி 624 601
தமிழ்நாடு

Copies printed: 1000

அச்சிட்டோர்:
மாடர்ன் ஆப்செட் பிரிண்டர்ஸ்
அண்ணா நகர், பழனி -624 601 ☎ 42332, 45919

பொன். இராசமாணிக்கம், எம்.ஏ.,எம்.எட்., 21, அண்ணா நகர்,
தலைமையாசிரியர் (ஓய்வு) பழனி.

# அணிந்துரை

தமிழ் மொழியில் பல துறைகளிலும் பல தலைப்புகளிலும் நூல்கள் வெளிவந்துள்ளன. அவற்றுள் சமயம் (Religion) பற்றிய நூல்கள் மிகக்குறைவாக உள்ளன. இந்துசமயத்தின் இரு கண்களாகத் திகழ்பவை சைவசமயமும், வைணவ சமயமும் ஆகும். சைவசமயத்தில் நாயன்மார் பாடல்களும், வைணவ சமயத்தில் ஆழ்வார் பாடல்களும் சிறப்புப்பெற்றவை. சைவசமயம் பற்றியும், நாயன்மார்களைப் பற்றியும் மிகுதியாக நூல்கள் வெளிவந்துள்ளன. ஆனால் வைணசமயம் பற்றியும் ஆழ்வார்களைப் பற்றியும் மிகக் குறைவாகவே நூல்கள் வெளிவந்துள்ளன. அத்தகைய நூல்களிலும் ஆராய்ச்சி நோக்கோடு எழுதப்பட்ட நூல்கள் அரியதாக உள்ளன எனலாம்.

பேராசிரியர் திரு.அ.பரமசிவம் தம்முடைய தமிழ்ப்புலமையாலும் பல ஆண்டுகள் கல்லூரியில் மாணவர்களுக்குப் பாடம் சொல்லிவந்த அனுபவத்தாலும் சாத்திரமும் தோத்திரமும் என்னும் ஆராய்ச்சி நூலை இயற்றியுள்ளார். ஆசிரியர் தம் நூலில் வைணவ சமயக் கோட்பாடுகள், ஆழ்வார்களின் பிறப்பு, வாழ்க்கை, திருமாலிடம் கொண்ட பக்தி மற்றும் அவர்தம் காலம் ஆகியவற்றை ஆராய்ந்து ஆதாரத்துடன் விளக்கியுள்ளார். அவற்றை ஆழ்ந்து படிப்போர்க்கு, ஆசிரியர் தம் நூலுக்காக மேற்கொண்ட கடின உழைப்பு புலனாகும். குறிப்பாக திருமங்கை ஆழ்வார் பற்றி ஆசிரியர் கூறியுள்ள செய்திகள் ஒரு தனி நூலாக வெளியிடும் அளவிற்கு உள்ளன. மேலும் ஆசிரியரால் பின்னிணைப்பாக இணைக்கப்பட்டுள்ள அட்டவணைகள்

ஆராய்ச்சி மாணவர்களுக்கு பெரிதும் பயன்படும் வகையில் உள்ளன.

ஆசிரியரின் இந்த முயற்சி பாராட்டத்தக்கது. வைணவ சமயத்திற்கும் தமிழ் இலக்கியத்திற்கும் ஆசிரியர் செய்துள்ள தொண்டு அவருடைய பெயரைத் தமிழ் இலக்கிய வரலாற்றில் நிலைத்து நிற்கச் செய்யும் என்பதில் அய்யமில்லை.

திருமலை– திருப்பதி தேவஸ்தானத்தார் இந்நூலைத் தம் நிதியுதவியுடன் வெளியிடுகின்றனர். இச்செய்தி ஒன்றே நூலின் தகுதிக்குச் சான்று கூறுவதாக அமையும். ஆசிரியரின் இச்சீரிய பணிக்காக திருமாலின் அருள் கிட்டுவதாக.

இந்நூல் கல்லூரிகளில் மாணவர்களுக்குப் பாட நூலாகவும், நூலகங்களில் அனைவரும் படிப்பதற்காகவும் பரிந்துரை செய்யப்படலாம்.

வாழ்க வளமுடன்!

அன்பன்

17–09–2001

பொன். இராசமாணிக்கம்

(ஒப்பம்)

# ஆசிரியர் உரை

உலகிலுள்ள மதங்கள் பெரும்பாலும் உண்டாக்கப் பட்டவை. அம்மதங்களை உண்டாக்கியவர் பெயர்களை அல்லது அவர்களுடன் தொடர்புடைய பெயர்களைக் கொண்டு விளங்குகின்றன. ஆனால் இந்துமதம் அனாதிகாலமாக உள்ளது. இதன் உட்பிரிவுகள் பல உள்ளன. உட்பிரிவுகளாக உள்ளவை அனைத்தும் முழுமுதற்பொருளாகக் கொள்ளும் கடவுளர்களின் பெயர்களைக்கொண்டு விளங்குகின்றன. இங்ஙனம் பலபிரிவுகள் இருப்பினும் " இறைவன் ஒன்றே" எனும் கோட்பாட்டினை உடையன என்பதனை அனைவரும் அறிவர். " பிணங்கு சமயம் பலபல ஆக்கி" என நம்மாழ்வார் திருவிருத்தம் 97–ம் பாசுரத்தில் குறிப்பிடுவதைக்கொண்டும் அறியலாம்.

தமக்கு முன்பு உள்ளவரையும், பின்பு உள்ளாரையும் ஈடேற்றுபவர்; உபய விபூதி ஐஸ்வரியத்தையும், எம்பெருமானால் தமது உடைமையாகப் பெற்றதனால் "உடையவர்" என்ற திருநாமத்தைப் படைத்தவர்; நமது சித்தாந்தத்திற்கே "எம்பெருமானார் தரிசனம்" என்ற பெயர் உண்டாகும்படி தரிசனத்தை வளர்த்தவர். இத்தகு சிறப்புக்களைக்கொண்ட ஸ்ரீஇராமானுசர் எனும் மகான் இந்நிலவுலகில் நெடுங்காலம் வாழ்ந்து நெறிமுறைகளை– யெல்லாம் அமைத்துக்கொடுத்தவர். இவர்களது தரிசனம் "உலகத்தில் எந்தமதத்தில் பலபொருள்களோடு பிரிக்கமுடியாதபடி கூடிய பரம்பொருள் ஒன்றேயாக ஒப்புக்கொள்ளபடுகிறதோ அது விசிஷ்டாத்வைதம்" எனப் பொருள் கொள்ளப்படுகிறது. இது "தத்துவம் – ஹிதம் – புருஷார்தம்" எனும் தத்துவத்திரயத்தை தெளிவுபடுத்துகிறது. உகப்போடு கூடிய பரபிரும்மமான ஸ்ரீமந்நாராயணனின் திருக்கல்யாண குணக்கடலுள் ஆழ்ந்து நெறிபிறழாது கைங்கரியம் செய்தலே விசிஷ்டாத்வைத வைணவர்களது வாழ்க்கை எனப்படுகிறது.

"உயர்வற உயர்நலமுடையவன்" எனப்போற்றி பரவப்படும் திருமாலைப் பரம் பொருளாக கொண்டு திகழ்வது வைணவம். திருமகள் கேள்வன் தன் குணக்கடலிலும் அழகு வெள்ளத்திலும் சிக்கித்தம் சிந்தையைதத் திறைகொடுத்து அவற்றில் ஆழங்கால்பட்டவர்கள் ஆழ்வார்களாவர். அத்தகைய பெரியோர் தம் விழுமிய அநுபவத்தில் முகிழ்த்த தேனும், பாலும், அமுதுமாகத் தித்திக்கும் பாசுரங்களின் தொகுப்பே நாலாயிரத்திவ்வியப் பிரபந்தம் ஆகும். இவைவைணவ சமயத்தின் புகழ்நூலாக மட்டுமல்லாது பொருள் நூலாகவும் திகழ்கிறது. இவர்களது பாசுரங்கள் வைணவத்திருக்கோவில்களில் மகான் நாதமுனிகள் காலத்திருந்தே சேவிக்கப்படுகின்றன என்பதை உணரமுடிகின்றது.

அருள்மிகு பழனியாண்டவர் கல்லூரி பண்பாட்டுத்துறையிற் பயின்ற பட்டப்படிப்பு மாணவர்களுக்கு சாத்திரமும் தோத்திரமும்; தமிழ்பண்பாடு ஆகிய பாடங்களைக் கற்றுக் கொடுக்கும் பணியில் அமர்த்தப்பட்டேன். சமய வரலாற்று பகுதியுள் சைவசமயத்திற்கு அதன் வரலாற்றைத் தெளிவாகக் கற்பிக்க நிரம்ப நூல்கள் துணைபுரிந்தன. ஆனால் வைணவ சமயவரலாற்றினைத் தெளிவுறக் கூறற்குரிய நூல்கள் அவ்வளவு கிடைக்கவில்லை. தமிழ் இலக்கிய வரலாற்று நூல்களும் வைணவசமய நூல்களைப்பற்றி விரிவாகத் தெரிவிக்கவில்லை. எனவே பல்வேறு அறிஞர் பெருமக்கள் ஆங்கிலத்தில் எழுதிய நூல்களைப் பயின்றேன். பல வைணவ சமயச்சான்றோர்களை அணுகி அவர்கள் கொடுத்த விளக்கங்களையும் பெற்றேன். அருளிச் செயல்கள் முழுவதையும், அதற்கு பல்வேறு பெரியோர்களின் விளக்க நூல்களையும் கற்றேன்.

பாசுரங்கள் சிறந்த, இனிய தமிழ்ப்பாடல்களாக இருந்தும் அவைகளைப் பாடிய ஆழ்வார்களிற் சிலர் மிகச்சிறந்த கவிகளாகவும் விளங்கியுள்ளனர். இவை உலகறிந்த உண்மை. எனினும் பண்பாட்டுத்துறை மாணவர்களும், தமிழ் இலக்கியம் பயிலும்

முதுகலைப்பட்டப்படிப்பு மாணவர்களும் உரிய ஈடுபாட்டுடன் பாசுரங்களை ஆழ்ந்து பயிலுவதில்லை. தென்னிந்திய வைணவ சயத்தினருக்கு நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் வேதமாகக் கருதப்பெற்று, அவை அவர்களுக்கே உரியது என்ற எண்ணம் பரவி உள்ளமையே காரணமாக இருத்தல் கூடும். எனினும் அருளிச் செயல்களுக்கு உள்ளுறைப் பொருளும் உண்டு, வெளிப்படைப் பொருளும் உண்டு என்பதனை தெளிவுறுத்தல் வேண்டும்.

சைவசமய மெய்யடியார் திருஞான சம்பந்தர் அருளிய திருவெழுக்கூற்றிருக்கை, அப்பர் பெருமான் பாடிய திருத்தண்டகம் போன்ற பாடல் அமைதிகள் திருமங்கையாழ்வாரின் அருளிச்செயல்களுள் இடம் பெற்றுள்ளன. மேலும் "சிறிய திருமடல்; பெரிய திருமடல்" ஆகியவை இலக்கியப் புரட்சியாகவும் தென்படுகின்றன. இவ்வாழ்வார் 108 வைணவத் திருப்பதிகளுள் 88 வைணவத் திருப்பதிகளுக்குச் சென்று மங்களாசாசனம் செய்துள்ளமை ஓர்சிறப்பு அம்சமாகவும் திகழ்கிறது.

(அ) இறைவனுக்கு மலரிட்டு, பச்சிலையிட்டு, கனிகளைப்படைத்து, மஞ்சனமாட்டி வழிபடுவது, ஹோமம் செய்தல் என்ற ஆரிய வழக்கிற்குமாறுபட்டது. பூஜை என்பது ஆரிய மொழிக்கு உரியதல்ல. பூசை என்பது பூ + செய் என்பது இறைவனுக்கு மலர் படைத்து வழிபாடு செய்தலைக் குறிக்கும்.

(ஆ) விஷ்ணு எனும் சொல் "விண்" என்ற தமிழ்ச் சொல்லுடன் நெருங்கிய தொடர்புடையது. விண்ணவன் இவனுக்குரிய நிலை என்பது குறிப்பிடத்தக்கது.

(இ) பெருவழக்காயுள்ள "கருடன்" என்ற சொல் கழுகு என்பதன் திரிபுச் சொல்லாகும்.

(ஈ) ஆண்மந்தி என்ற தமிழ்சொல்லினையே ஹனுமான் என்று வடமொழியில் கொள்ளப்பட்டது.

(உ) ஏறத்தாழ 450 திராவிடச் சொற்கள் ஆரியமொழியில் இடம் பெற்றுள்ளன எனும் இக்கருத்துக்களை எஸ்.கே. சட்டர்ஜி அவர்கள் அவர்தம் ஆராய்ச்சி நூலான "The History and culture of the Indian people - The vedic Age" என்ற நூலில் 160; 162 to 165 பக்கங்களில் தெளிவுபடுத்துகின்றார்.

(ஊ) இறைவன் என்ற உணர்வின்றிக் கண்ணனிடம் மிக்க அன்பு-பிரேமை கொண்டோரே கோபியர்கள். தம்வீட்டையும் கணவனையும் விடுத்து கண்ணனைச்சென்று அடைதலையே பரம்பொருளைச் சரணடதல் ஆகும். பிருந்தாவனமே இதயம்; இராதையும் கோபியர்களும் உலக மாயையில் சிக்குண்ட உயிர்கள். கண்ணபிரானது வேய்ங்குழல் நாதமே இறைவனது குரல். அவனைப்பின்பற்றுவது, நாமம், புகழ், உயர்வு, சுயகவர்வம், இல்லறவாழ்க்கை போன்றவை அனைத்தையும் குறிக்கும் குறியீடுகளாகும் எனத் டாக்டர் எஸ். இராதா கிருஷ்ணன் தமது Indian Philosophy - Vol I பக்கம் 495-ல் தெளிவுறுத்துகின்றார்.

(எ) மிகப்பரந்த அளவில் விஷ்ணுவை வழிபடும் தென்னிந்திய மக்களிடம் வேத நெறிக்கும் புறம்பான அவைதீக ( Un-vedic ) கோட்பாடுகளைக்கொண்ட பாஞ்சாரத்திரம் பெற்றுள்ள செல்வாக்கால், வைதீக பிராமணீயத்திற்கும், பிற்காலவைணத்திற்கும் எத்தகைய கசப்புணர்ச்சியும் ஏற்படாமல் இருப்பது வியப்பிற்குரியது. இத்குகருத்தினை டாக்டர் எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார் தமது ஆராய்ச்சி நூலான Ancient India and South Indian History and Culture பக்கம் – 805ல் விளக்கியுள்ளார்.

மேற்குறித்த அறிஞர்பெருமக்களது கருத்துக்கள் நம்சிந்தனைக்-குரியனவாக உள்ளன.

அருள்மிகு பழனியாண்டவர் இந்தியப் பண்பாட்டுக்கல்லூரி

உருவாகக் காரணமான அறங்காவல் குழுத் தலைவராக இருந்த பழனி பி.எஸ்.கே. லக்ஷமீபதி ராஜு ஆவர்கள். அடியேனை சமய நெறியில் ஈடுபாடு கொள்ளச் செய்த பெரியாரும், பி.எஸ்.கே. லக்ஷமீபதிராஜு அவர்களது நிழ்போல நின்ற பெரியார் கே.ஏ. நாராயணசாமி மணியகாரர் அவர்களுக்கும் நன்றிகடன்பட்டவனாக உள்ளேன்.

வைணவசமயத்தையும் விசிஷ்டாத்வைத தத்துவத்தையும் மாணவர்களுக்குக் கற்றுத்தரும் அளவிற்கு அடியேன்பால் அன்புகொண்டு தெளிவுறுத்திய பன்மொழி அறிஞரும், ஸ்ரீ வைஷ்ணவ சுதர்சனப்பத்திரிக்கை அதிபரும் ஆசிரியருமான திருச்சி அட்வகேட் உ.வே. எஸ். கிருஷ்ணசுவாமி ஐயங்கார், எம்.ஏ., பி.எல்., அவர்களுக்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

இந்நூல் வெளியாகும் காலத்தே பல தரப்பட்ட உதவிகள் புரிந்த தமிழ் அறிஞரும் மேல்நிலைப் பள்ளித் தலைமை ஆசிரியருமாகிய பொன். இராசமாணிக்கம், எம்.ஏ., அவர்களுக்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இந்நூலை நல்லமுறையில் அச்சிட்டு வெளிவர உதவிசெய்த பேராசிரியர், டாக்டர், திரு.எஸ். பழனிச்சாமி அவர்களுக்கும் நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

அடியேனது இந்நூலை அங்கீகரித்து, இந்நூல்வெளியிட பொருள் உதவியும் செய்த திருமலை திருப்பதி தேவஸ்தானத்திற்கு நன்றியை உரித்தாக்குகின்றேன். இவை அனைத்திற்கும்மேலாக, காரணகர்த்தாவான திருவேங்கடமுடையானை மனமொழி, மெய்களால் அடியேன் வணங்குகிறேன்.

பழனி
25-9-2001

அ.பரமசிவம்
அழகப்பர் இல்லம், சண்முகபுரம்

# பொருளடக்கம்

# முன்னுரை

தமிழகம் என்பது "வடவேங்கடம் தென்குமரிக்கு" இடைப்பட்ட பழைய தமிழகத்தையே குறிக்கும். சமய எழுச்சிக் காலம் என்று வரலாற்று ஆசிரியர்கள் குறிப்பிடும் பல்லவர் காலம் ஏறத்தாழ கி.பி.300 முதல் கி.பி.900 வரை எனலாம். அதற்கு முற்பட்டது சங்க காலம் எனப்படும். அக்காலத்து வைணவ சமயமும், பிற சமயங்களும் பற்றி அறிய "தொல்காப்பியம்; பத்துப்பாட்டு; எட்டுத்தொகை; சிலப்பதிகாரம்; போன்ற நூல்கள் பெருந்துணை புரிவன.

பல்லவர்கள் ஏறத்தாழ கிருஷ்ணையாறு முதல் தெற்கே புதுக்கோட்டை வரை தங்கள் பேரரசை ஏற்படுத்தி ஆட்சி புரிந்தவர்கள். அவர்கள் காலத்தில் தெற்கே சோழரும், வடமேற்கில் சாளுக்கியர், இரட்டர் என்பவர்களும் ஆண்டு வந்தனர். சிறப்பாக பல்லவ நாட்டிலும், பொதுவாக தமிழகத்தின் பிறபகுதிகளிலும் கட்டப்பட்ட ஆலயங்கள், இயற்றப்பட்ட இலக்கியங்கள் ஆகியவை அக்கால வைணவ சமயத்தை அறியப்பெருந்துணை புரிவன. பல்லவர் காலத்தில் வைணவம் தமிழகம் முழுவதும் ஆழ்வார்களால் பரப்பப்பட்டது எனலாம்.

வைணவ கோயில்களில் விழாக்களும் பூசைகளும் நடைபெற்றன எனலாம். தமிழகத்தில் வைணவ சமயத்தின் பழைய நிலைமை எத்தகையது என்பதைச் சமய சரித்திரங்களை நீள ஆராய்ந்து சொல்லுமிடத்து, திருமாலைப் பரதெய்வமாகக் கொண்டு வழிபட்டு வரும் கொள்கை இந்நாட்டு மக்களிடம் அநாதியாகவே தோன்றியுள்ளது, என்று கொள்ள தடையில்லை(1) என்ற வலுவான கருத்தும் நிலவுகின்றது.

மனிதன் வாழ்வு வளம் பெறவும். விலங்குத் தன்மையிலிருந்து விடுதலை பெறவும் வழியாக – நெறியாக செய்யப்பட்டது அல்லது சமைக்கப்பட்டது சமயமாகும். மனித மனத்தின் மாசை அகற்றிப் பண்புடையவனாய் வாழ முற்படுவதே சமய வாழ்க்கை எனக் கொள்ளல் கூவறாகாது. அனைத்தையும் கடந்து நிற்கின்ற, ஒப்பற்ற ஒன்றை –

பரம்பொருளை – கடவுள் என்ற ஒன்றை, மனத்தில் ஏற்று வாழ்பவனே – சயமவாதி எனப்படுகின்றான். "கடவுள் – மனிதவாழ்வு" இவ்விரண்டின் இடையேயுள்ள தொடர்பு, இவ்வாழ்விலிருந்தே கடவுளை அடையும் நெறி – ஆகியவற்றை புகட்டுவதே சமயம் எனினும் பெருந்தும். மனித இனம் அறிவுத்திறம் பெறத் தொடங்கிய காலத்திலிருந்தே சமயமும் உடன் வளர்ந்ததாகத் தோன்றுகின்றது.

மேனாட்டு மொழியில் சமயம் என்பதற்கு"RELIGION" என்ற சொல் இருபொருளில் வழங்கப்படுகிறது.' ஒன்று குறி சொல்லுவது. அதாவது இறைவன் திருவுள்ளத்தை அறிவதற்காகச் சில நிகழ்ச்சிகளை அடையாளமாக கொள்ளுவது; மற்றொன்று இறைவனோடு ஒன்றுபடுத்துவது அல்லது மீண்டும் பிணைப்பதாகும். நெறி அல்லது வழி என்ற பொருளிலும் பல சமயங்கள் கருதப்பட்டு வந்துள்ளன. தமிழ் நூல்களிலும் திருநெறி, செந்நெறி என்ற ஆட்சிகள்உண்டு என்பர்.[2] சமயம் என்பதற்கு எத்தகைய சிறப்புப் பொருள் வீரையறை இருப்பினும், குறிப்பிட்ட சில உயரிய நம்பிக்கை – பழக்கவழக்கங்கள் – உணர்வு – மனோநிலை போன்றவற்றையே குறிக்கும் [3] என்பர்.

சமய வளர்ச்சி என்பது விளக்கமற்ற கீழ்நிலையிலிருந்து விளக்கமான மேல்நிலைக்கு ஓங்குவதைக் குறிக்கும் என்று கூறலாம். தீர்க்கதரிசிகளும் இறைவனடியார்களும் கூறும் சமயமே வாழ்வின் முழுமை. அது வாழ்வின் ஒருபகுதியன்று என நமக்கு சொல்லுகின்றனர்.

உலகச் சமயங்களுள் மிகப் பழமையான இந்துமதம் இந்தியாவில் தோன்றிற்று. இது இன்றும் இந்தியாவின் பெரும்பகுதி மக்களால் மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. இதற்கு "வைதீக தருமம்" என்ற பெயரும் உண்டு. "வைதீக தருமம்" என்பதற்கு வேதங்களின் சமயம் என்பது பொருள். வேதங்கள் இந்து மதத்திற்கு அடிப்படையாய் அமைந்த சமயத் திருநூல்கள் ஆகும்.

"வேதம்" என்பது "கடவுள் பற்றிய பேரறிவு" (God-Knowledge) "இறையியல்" (God-Science) என்னும் பொருள்கொண்ட பொருள் பொதிந்த சொல்லாகும்.[4]

வேதகாலம் என்பது இந்தியாவில் ஆரியர்கள் குடியேறி, நிலையான வாழ்க்கையை அமைத்து, அவர்தம் பண்பாடும், நாகரீகமும் சீரான வளர்ச்சியுற்ற கி.மு.1500 முதல் கி.மு.600 வரையுள்ள காலத்தையே குறிக்கும் என்று டாக்டர் எஸ். இராதாகிருஷ்ணன் அவர்கள் குறிப்பிடுகின்றார்.

பண்டைத் தமிழகத்தில் வாழ்ந்த பெருமக்கள் தேவங்களையும், வேதகாலத் தெய்வங்களையும், வேதநெறியான வேள்வி செய்தலையும், வேள்வி செய்து துறக்கம் புகுதலையும் அறிந்திருந்தனர் என்பதற்கான குறிப்புகள் சங்க நூல்களில் உள்ளன. மேலும் "இராமாயணம்; பாரதம்" ஆகிய இதிகாசச் செய்திகளும், புராணச் செய்திகளும், கண்ணபிரானது பால லீலைகள் போன்றவைகளும் இடம் பெற்றுள்ளன.

## ஆய்வை வருமாறு

"வேதம் ஓதுதல்" (புறம் –99), வேத நெறியைப் பாராட்டல் (புறம்–2) இவற்றைச் செய்துவரும் பார்ப்பனர்களைப் பாராட்டடல் (புறம்–166) வைதீக அறங்களில் ஈடுபாடு (புறம்–34) அந்தணர் அருமறைப் பொருள் (பரிபா 1–3) போன்ற குறிப்புகள் உள்ளன. மேலும் திருமாலை "வேத முதல்வன் என்ப தீதற விளங்கிய திகிரியோன்" (நற்.கட.வ. 6-7) என்று வேதநாயகனாகக் கூறும் பகுதியும் உள்ளது. இராமகாதை (6), பாரதம் (7) புராணச் செய்திகள் (8) கண்ணபிரானது பாலலீலைகள் (9) பற்றிய குறிப்புகளும் உள்ளன. தமிழ்மொழியில் இன்றுள்ள நூல்களுள் பழமையானதாக கருதப்படும் தொல்காப்பியத்தில் வேதகாலத் தெய்வங்களான இந்திரன், வருணன் ஆகியோர் குறிப்பிடப்படுகின்றனர்.

வைணவ சமயத்தைக் கருதும் வேளையில் தோற்றம் வடநாடு எனினும் தமிழ்நாட்டுச் சமயப் பிண்ணணியுடன் அதுகொண்ட தொடர்பு, இறுதியாக தென்னாட்டுச் சூழ்நிலையில் அதன் வளர்ச்சி ஆகியவற்றை ஆராய வேண்டியுள்ளது. "தென்னிந்திய மக்கள் தங்கள் மொழிகளைப் பாதுகாத்துக் கொண்டு ஆரியப் பண்பாட்டையும் பின்பற்றியிருக்கக் கூடும்" [10] மொழி வழியாகவும், நிறுவனங்கள் வழியாகவும் ஏற்பட்டட திராவிட ஆரியப் பண்பாட்டை ஆராய்ந்து பார்த்த பின், இந்து நாகரிகத்திற்காகத் திராவிடர்கள் மிகச்சிறந்த பங்கை அளித்துள்ளார்கள் என்பது பொதுவாக ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது.[11]

இந்து மதத்தின் உட்பிரிவுகளாகக் கொள்ளப்படும் சமயங்களும், அச்சமயங்கள் போற்றும் கடவுளர்களும் வருமாறு,

| | | | |
|---|---|---|---|
| 1) | சைவம் | சிவன் | முழுமுதற்கடவுள் |
| 2) | வைணவம் | விஷ்ணு | " |
| 3) | சாக்தம் | சக்தி | " |
| 4) | சௌரம் | சூரியன் | " |
| 5) | கௌமாரம் | குமரன் | " |
| 6) | காணாபத்தியம் | கணபதி | " |

மேற்குறித்துள்ள ஆறு சமயங்களை முறையே சாக்தம்; கௌமாரம்; காணபத்தியம் ஆகியவற்றைச் சைவத்துடனும், சௌரத்தை வைணவத்துடனும் இணைத்து அல்லது தொடர்புபடுத்திப் பேசுவது மரபாகவுள்ளது. எனவே, சைவமம் வைணவமும் இந்துமதத்தின் இருகண்களாகத் திகழ்பவை எனக் கொள்ளலாம்.

## வைணவ சமயம்

"வைணவ சமயத்தின் முழுமுதற்பொருளாகக் கொள்ளப்படும் விஷ்ணு, வேதங்களில் துதிக்கப்படும் பல்வேறு தெய்வங்களுள் ஒருவாராகவே கருதப்பட்டார். [12] எனினும் "பேருருவம்" (Brhat Sarirah)

கொண்டவன்" அல்லது "உலகையே தனது உடலாக் கொண்டவன்" (Pratyety-ahavam). . . . . என்றும் "அடியார்களின் வேண்டுகோளை ஏற்று வருகின்றவன்" என்றும், அவர்களின் இன்னலைக் களைவதற்காக பூவுலகை மும்முறை சுற்றியவன்[13] என்றும் ருக் வேதத்தில் போற்றப்படுகின்றன என்ற கருத்தைக் கூறிகின்றனர்.

மேலும் விஷ்ணுவின் உருவில் சூரியன் அனைத்துலகையும் தாங்குகின்றான். விஷ்ணுமூன்றுகாலடிச் சிறப்புடையவன்; மூவுலகையும் மறைப்பவன். அவனது ஏற்றத்தை எவரும் அடைய முடியாது"[14] என்பவற்றையும் வேதங்கள் தெரிவிக்கின்றன என்பர். ஆகவே, வைணவ சமயத்தின் தோற்றத்தை வேதங்களில் காண முடிகிறது. ஆனால் "விஷ்ணு" எனும் சொல் "விண்" என்ற தமிழ்ச் சொல்லுடன் தொடர்புடையது"[15] என்று திரு.எஸ்.கே. சாட்டர்ஜி அவர்கள் குறிப்பிடுவது சிந்தனைக்குரியதாகும்.

வைணவ சமயத்திற்கு "பாகவதம்; சாத்துவதம்; ஏகாந்திகம்; பாஞ்சராத்திரம்" என்ற பெயர்களும் உண்டு. வாசுதேவ வழிபாட்டு நெறி சாத்வதம்; பாகவதம் எனப்படும்[16] காலப்போக்கில் வாசுதேவனை நாராயணனுடனும், விஷ்ணுவுடனும் பின்னர் ஆயர்பாடிக் கண்ணனாகிய கிருஷ்ணனுடனும் இணைத்து வைணவ சமயம் வளர்ச்சியுற்றது[17] என்று திரு.பி.வி. இராமானுசம் அவர்கள் கூறுகின்றார். வாசுதேவ – கிருஷ்ணனை வழிபடும் நெறியாகிய பாகவதம், பாஞ்சராத்திரம் என்றும் அழைக்கப்பட்டது. ஐவகைக் கோட்பாடுகள் கொண்டமையால் பாஞ்சராத்திரம் என்னும் பெயர் பெற்று இருக்கலாம்[18] என்பர். சாத்துவத குடிக்குரிய தெய்வமகனாகப் போற்றப்படும் வாசுதேவ–கிருஷ்ணனை பக்தி இயக்கத்தின் ஆணிவேர்[19] என்று கருதுகின்றனர். பாகவத சமயமே, நாராயணியம், சாத்வதம், ஏகாந்திகம், அல்லது பாஞ்சராத்திர சமயமாகும். இதற்குரிய அடிப்படை ஆதாரங்களாக இருப்பவை, "மகாபாரதத்திலுள்ள

நாராயணீயம், பகவத்கீதையும், பாகவத புராணம், நாரத சூத்திரம், சாண்டில்ய சூத்திரம் [20] முதலியவைகளாகும் என்ற கருத்தும் நிலவுகிறது.

## ஆகமங்கள்

சமயக் கொள்கை விளக்க நூல்களும், வழிபாட்டு முறை பற்றிக் கூறும் நூல்களும் ஆகமங்கள் எனப்படும். இந்து சமயத்தின் பிரிவுகளுள் சிறப்பிடம் பெற்றுள்ள சைவம், வைணவம் அகியவைகள் தம் கோட்பாடுகளை அவற்றிற்குரிய ஆகமங்களை அடிப்படையாக அமைத்துக் கொண்டன. வைணவ ஆகமங்களாக "வைகானசம், பாஞ்சராத்திரம்" ஆகிய இரண்டனுள், சமய வழிபாட்டு நெறிமுறைகளுக்கு பாஞ்சராத்திர ஆகமங்களையே அடிப்படை ஆதாரமாகக் கொண்டுள்ளனர். இவை நாராயணனால் அருளப் பெற்றவை என்று வைணவ சமயத்தோர் கருதுகின்றனர். தற்கால வைணவத்தில் இக்கோட்பாடே தலைசிறந்து விளங்குகிறது. எனவே, வைணவ சமய வளர்ச்சி நிலை பற்றி அறிவதற்கு பாஞசராத்திர ஆகமக் கருத்துக்கள் பெருந்துணையாகும்.

நமக்குக் கிடைத்துள்ள பழமையான ஆதாரம் மகாபாரதம்-சாந்தி பருவத்திலுள்ள நாராயணீயப் பகுதியில் அடங்கியுள்ள பாஞ்சராத்திரக் கோட்பாடுகளே ஆகும் [21] என்பர். பாஞ்சராத்திர ஆகமங்களில் உயர்ந்த ஆய்வுப்பகுதிகளாக இருப்பவை நான்கு. அவை ஞானம், யோகம், கிரியை, சரியை என்பவைகளாகும். அவற்றுள் ஞானம் என்பது இறைநிலை. இயற்கை, ஆன்மா, படைப்பு, உய்வுநெறி (Means of Liberation) முதலியவைகளைப் பற்றி கூறும் பகுதி. யோகம் என்பது தியானம் அல்லது ஒருநிலைப்படுதலே சிறந்த ஆற்றலைப் பெறற்குரியதாகக் கூறும் பகுதி. கிரியை என்பது திருமேனி படைத்தல் (விக்கிரகம்); ஆலயம் அமைத்தல், இறைவனுக்குப் படைக்க வேண்டியவை பற்றிக் கூறும் பகுதி. சரியை என்பது வழிபாடு, சடங்குகள், விழாக்கள், சமூகக் கடமைகள் பற்றிக் கூறும் பகுதியாகும்.[22]

## இறைநிலை பற்றி அவ்வாகமம் கூறும் செய்திகள் வருமாறு

"பர; வியூக, விபவ, அந்தர்யாமின், அர்ச்சை" என்னும் ஐந்து நிலைகளில் இறைவன் தன்னை வெளிப்படுத்துகின்றான். அவற்றுள் பரம் என்பது அனைத்து வடிவங்களைக் கொண்ட நிலையையும், யாவும் கடந்து நிற்கின்ற நிலையையும் குறிப்பதாகும். எவ்வுருவும் அற்ற, தோற்றம், இடைநிலை முடிவு அற்ற பரம்பொருள் (பிரம்மம்) நிலையாகும்.[23]

வியூகம் என்பது கூட்டுவடிவம் ஆகும். அவை வாசுதேவ – சங்கர்ஷன – பிரத்தியும்ன – அநிருத்த வடிவங்களாகும். திருமகளிடத்தும் நாராயணிடத்தும் உள்ள குணங்களினின்று வியூகநிலை உற்பத்தியாயிற்று. "அறிவு, தலைவனுக்குரிய இயல்பு, ஆற்றல், பலம், ஆண்மை, ஒளிமயமாய்" இருத்தல் (ஞானம், ஐஸ்வரியம், சத்தி, பலம், வீரியம், தேஜஸ்) எனும் ஆறு குணங்களுடன் கூடிய பரம்பொருள் நிலைக்கு ஒப்பானதே வாசுதேவவடிவம். அவ்வடிவத்திளின்று ஞானம், பரம் ஆகியவற்றுடன் சம்கர்ஷன வடிவம் தோன்றிற்று. ஐஸ்வர்யம், வீரியம் ஆகியவற்றுடன் பிரத்தியும்ன வடிவம், சம்கர்ஷன வடிவத்திடம் தோன்றிற்று. இறுதிவடிமான அநிருத்திய வடிவம் "சத்தி ; தேஜஸ்" ஆகியவற்றுடன் பிரத்தியும்ன வடிவத்திடம் தோன்றிற்று.[24] மேற்குறித்தவற்றுள் வாசுதேவ வடிவம் யாவும் கடந்த "பரம்பொருள்" நிலைக்கு ஒப்பானதாகக் கூறப்பட்டுள்ளது.

மற்றைய மூன்றும் முறையே கிருஷ்ணனுடைய அண்ணன், மகன், பேரன் ஆகியோரை வைத்தே பெயரிடப்பட்டுள்ளமை அறியக் கிடைக்கின்றது.

வியூகக் கோட்பாட்டுடன் நெருங்கிய தொடர்புடையதே விபவம். 'விஷ்ணுவின் அவதார வடிவங்களே விப்வமாகும். [25] பல

அவதாரங்கள் பற்றிப் பேசப்படினும் திருமாலின் பத்து (தச) அவதாரங்களையே சிறப்பாகக் கொள்ளுவது பெருவழக்காக உள்ளது.

அந்தர்யாமின் என்பது உள்ளார்ந்த வடிவம் ஆகும். அனைத்து ஆன்மாக்களின் உள் இருந்து ஆட்சி புரிதலைக் குறிக்கும். இதனை அநிருத்த வடிவ நிலையாகக் குறிப்பிடுகின்றனர். [26] தியானம் செய்வதைப் பழக்கமாகக் கொண்டோர்க்கு இந்த வடிவமே ஏற்றது என்பர். விஷ்ணுவின் வடிவங்களில் பருப்பொருளாய் அமைந்த வடிவமே அர்ச்சையாகும். பாஞ்சராத்த ஆகமங்களில் குறித்துள்ள அனைத்துச் சடங்குகளையும் செய்வதால் விஷ்ணு, விக்கிரத்திற்குள் இறங்கி, அதை அற்புத ஆற்றல் – பலம் முதலியவற்றால் உயிர்ப்பூட்டும் வடிவமாகும். [27] கோவில்களில் நிறுவப்பட்டுள்ள இறைவன் திருமேனியை, அர்ச்சாவதாரம் என்றும், ஆன்மாக்களை மீட்கும் பெருங்கருணைத் தேக்கம் என்றும், வைணவ சமயத்தோர் நம்புகின்றனர். அர்ச்சாவதாரமே பக்தர்களுக்கு எளிதிற் கிட்டக்கூடியதாகவும் உள்ளது.

பாஞ்சராத்த ஆகமங்களில் குறித்துள்ள இந்த ஐந்து நிலைகளைத் தென்னாட்டு வைணவத் தத்துவ ஆசிரியராகிய உயர்திரு பிள்ளை லோகாசாரியர் குறிப்பிட்டுள்ளமை வருமாறு.

"யாவும் கடந்த இறைவடிவத்தைப் புரிந்து கொள்ளுவது என்பது மறு உலகத்திலிருந்து தண்ணீர் கொணர்ந்து தாகத்தைத் தீர்ப்பது போன்றதாகும்". வியூக வடிவம் என்பது கதைகளில் வருகின்ற பாற்கடல் போன்றது. அதனை அடைவதென்பது இயலாத காரியமே. உள்ளார்ந்த வடிவம் பூமிக்கடியில் இருக்கும் தண்ணீரைப் போன்றது. அது ஒருவன் பாதங்களுக்குக் கீழே இருப்பினும், அவன் விடாய் தீர்க்க உடனடியாகக் கிட்டாது. அவதார வடிவங்கள், ஒரு சிறிது நேரம் நாட்டில் வந்து சூழ்ந்து கொள்ளும் வெள்ளத்தைப் போன்றவை. அவை நிலைத்து நிற்கக் கூடியன அல்ல. அர்ச்சை வடிவம் நிலையாயிருக்கும்

ஊருணி நீரைப் போன்றது. அதைக் கொண்டு எவரும் எந்த நேரத்திலும் தாகத்தைத் தீர்த்துக் கொள்ளலாம். வைணவ சமய வளர்ச்சியில் உயர்ந்த இடத்தைப் பெற்றுத் திகழ்வது அவதாரக் கோட்பாடாகும்.

## அவதாரம்

வைணவ சமயத் திருநூல்களுள் சிறப்பாகக் கொள்ளப்படும் பகவத் கீதையில் "நான் பிறப்பற்றவன், அழிவற்றவன்; உயிர்களுக்கெல்லாம் ஈசன், எனினும் என் பிரகிருதியை வசப்படுத்தி ஆத்ம மாயையினால் அவதரிக்கிறேன் (4.6) "எப்பொழுதெல்லாம் அறம் அழிந்து மறம் மேலெழுகிதோ, அப்பொழுதெல்லாம் என்னை நான் பிறப்பித்துக் கொள்ளுகின்றேன் (4.7) நல்லாரைக் காப்பதற்கும் கெட்டவரைக் கரந்தொடுக்குவதற்கும், தர்மத்தை நிலைநாட்டுவதற்கும் யுகந்தோறும் நான் அவதரிக்கிறேன்" (4.8) என்று கண்ணபிரான் அவதார நிலையினை விளக்குகின்றார்.

பாஞ்சராத்திர ஆகமங்கள் குறிப்பிடுகின்ற விபவ வடிவங்கள் பற்றிய கருத்தும், பகவத் கீதை குறிப்பிடுகின்ற அவதார நிலை பற்றிய கருத்தும், ஏறத்தாழ ஒத்துள்ளமை இங்கு குறிப்பிடத்தக்கதே. அவதாரங்களுள் சிறப்பிடம் பெற்றுள்ள பத்தும், உயிர்களின் பரிணாம வளர்ச்சியைக் காட்டுவனவாக உள்ளன. (1) மச்சம் (மீன்) (2) கூர்மம் (ஆமை) (3) வராகம் (பன்றி) ஆகிய மூன்றும் அஃறினைப் பொருள்களாகும். அவை முறையே நீர் – நீரும் நிலமும் – நிலம் ஆகியவற்றில் வாழக்கூடிய இனமாகும். அதனையடுத்து (4) நரசிங்கம் (மனித சிங்கம்) மனிதனுக்கும் விலங்குக்கும் இடைப்பட்ட வளர்ச்சி நிலை. பின்னர் (5) வாமனன் (குள்ளன்) வளர்ச்சியற்ற மனிதநிலை; (6) பரசுராமர், கொடூரம், வன்செயல், மனிதவர்க்கத்தை (சத்திரியர்களை) அழித்த கொலைவெறி போன்ற பண்பாடற்ற கோடாரி

என்ற படைக்கலத்துடன் திரியும் **மனித நிலையைக்** குறிக்கும். அதற்கடுத்த வளர்ச்சி நிலையே (7) இராமவதாரம். தெய்வீகத்தன்மை, ஆன்மீக உணர்வு, இல்லறவாழ்க்கை, பற்று ஆகியவற்றைக் கொண்டதாகும். (8) கிருஷ்ணவதாரம் உலகமாகிய களத்தில் போர் நடவடிக்கையில் நுழைந்து வெற்றி பெறத் தூண்டுகின்ற அமைப்பை உடையது (9) புத்தாவதாரம். உலக உயிர்களிடம் அன்பு கொண்டு மானிட வர்க்கம் பிறவிப் பெருங்கடலை நீந்தி, துன்பத்திலிருந்தும் விடுதலை பெற்றதற்காக உழைத்த மிக உயர்ந்த நிலையாகும். (10) கல்கி, அநீதியைப் போரிட்டழிக்க கையில் வாளுடன் இனி வரவேண்டிய அவதாரம் ஆகும்.

அவதாரக் கோட்பாடு வைணவ சமயக் கோட்பாடாக மட்டுமின்றி, மானிட வர்க்கம் பல திருப்பு மையங்களைக் கடந்து, கீழ்நிலையிலிருந்து ஓர் உயர்ந்த நிலையடைந்த வளர்ச்சி வரலாறாகவும் விளங்குகிறது. அத்துடன் மனித இனம் தம் நிலையை உணர்ந்து சிறந்த லட்சியங்களுடன் வாழ்வதற்கு உறுதுணையாக உள்ளது என்றும் கொள்ளலாம்.

### *கண்ணபிரான்*

வைணவத்திற்குள்ள பிற பெயர்களான சாத்வதம், பாகவதம், பாஞ்சராத்ரம் ஆகியவை வாசுதேவ கிருஷ்ணனை வழிபடும் நெறிகள் என்னும் பக்தி நெறிக்கு கிருஷ்ண பகவானே காரணர் என்றும் கொள்ளப்படுகின்றது. இதனால் கண்ணபிரானாகிய கிருஷ்ணர் வைணவ சமயத்தின் உயிர் நாடியாவார் எனிற் பிழையாகாது. "வட இந்தியாவின் மீது கிரேக்கர்கள் படையெடுத்த கி.மு.4-ம் நூற்றாண்டில் வட இந்திய மக்கள், தெய்வ-மனிதநிலைகளுக்கு இடைப்பட்ட பிறப்பாகக் (Demi-God) கருதிய பெருவீரனை வணங்கி வந்ததாகத் தெரிகிறது. இந்த வழிபாட்டுக்குரியவர் கிருஷ்ணனேயாவார். பின்னர் இவ்வழிபாடு பஞ்சாபிலும் சிறப்பாகப் பரவியதென்பர். [29] பின்னர்

கோபாலர் (ஆயர்) களுடன் நெருக்கமாக இணைக்கப்பட்டு, பசுக்கூட்டங்களைக் காப்பவனாகக் கொள்ளப்பட்டது. மதிப்பிற்குரிய வரலாற்று நாயகன் என்ற நிலையில் வழிபடும் முறை ஏற்பட்டு காலப்போக்கில் இதிகாச, புராணத் த்லைவனாகவும்; தெய்வ மகனாகக் கொள்வதற்கும் வாய்ப்புகள் ஏற்பட்டன. இக்காலத்தில் தான் உயர் சிறப்புடன் கூடிய புராணத் தலைவனாக்கப் பட்டான் என்பது உறுதியாகும் என்பர்.[30]

கண்ணபிரானின் இளமைக்காலச் செயல் (பால லீலை)–களுள் "காளிங்கன்" என்ற பாம்பை அடக்கியதை நாக பாம்பைத் தம் குல மரபுச் சின்னமாகக் கொண்டு மதுராவின் பகுதியை கி.மு.3–ம் நூற்றாண்டில் ஆட்சி புரிந்த நாகர்களை அடக்கி கண்ணபிரான் வெற்றி கொண்டதைக் குறிக்கும்.[31] ஆயர்பாடி மக்கள் இந்திரனை வழிபடுவதினின்றும் தடுத்து, அவ்வழிபாட்டைத் தானே ஏற்றுக் கொண்டதால், இந்திரன் சினமுற்று அம்மக்களை அழிக்க முயன்ற போது, கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்துக் கண்ணபிரான் காப்பாற்றினான் என்பதிலிருந்து, "கண்ணபிரானிடம் இந்திரன் தோல்வியுற்றான்"என்பது, வைதீக நெறி முறைகளை அழித்து திருமால் வழிபாட்டு முறை மேலோங்கியது [32] என்பதை குறிக்கும் என்று டாக்டர் எஸ்.இராதாகிருஷ்ணன் அவர்கள் குறிப்பிடுகின்றார்.

வைணவ சமயத்தின் குறிப்பிடத்தக்க நிலையில் இருப்பது இறை உருவ வழிபாடாகும். இதனை பாஞ்சராத்திர ஆகமங்கள் அர்சாவதாரம் எனக் குறிப்பிடுகின்றன. "எல்லோரையும் உய்விக்க வேண்டுமென்று அவர்கள் வாழும் இடத்தில், தான் அர்ச்சாவதாரம் என்ற விக்கிரகங்களின் வடிவில், அவர்களது விருப்பத்திற்குத் தக்க அமைந்துள்ளன என்பதும்,[33] "பாஞ்சராத்தின் அடிப்படைத் தத்துவம், பற்றற்ற பரமனைத் தொழுது அதன்மூலம் பிறவிப் பெருங்கடலை நீந்துவதே [34] யாகும்.

வளர்ச்சியுற்றுத் திகழும் தற்கால வைணவ சமயம், பாஞ்சராத்திரத்தின் பிரபத்தி அல்லது திருவடிகளில் முற்றும் சரணடைதல் எனும் கொள்கையைக் கொண்டு திகழ்கின்றது.(35) பிரபத்தியே இறையன்பில் உணர்ந்த நிலையாகக் கொள்ளப்படுகிறது. சமூக அந்தஸ்து, அறிஞன், அறிவிலி என்பன போன்ற வேறுபாடு இன்றி யாவருக்கும் உரியதாகும். (1) இறைவனுக்கு விருப்பமானவற்றையே விழைதல் (2) இறைவனுக்கு விருப்பம் அல்லாதவற்றைக் களைதல் (3) அவன் தன்னைக் காப்பான் என்ற தளராத நம்பிக்கையோடிருத்தல் (4) அவன் காவலை வேண்டி நிற்றல், (5) இறைவனது பணிக்குத் தன்னை அர்ப்பணித்தல், (6) தான் ஒன்றுமில்லை என்று எண்ணுதல் எனும் இவைகளையே பிரபத்திக்கு (Self Surrender) இன்றியமையாதவைகளாகக் கருதப்படுகின்றன.[36] பகவத் கீதையிலும் சரணாகதி [37] முக்கிய இடத்தைப் பெற்றுள்ளது. பாகவதம், சாத்வதம், ஏகாந்திகம் எனப்படும் வைணவ சமயத்தில் சிறப்பான இடத்தைப் பெற்றுத் திகழ்வது பாஞ்சராத்திரமும் ஆகும். எனினும் இந்த ஆகம நெறியை அவைதீக நெறி (Non-Vedic) என்பர். இதன் வளர்ச்சி நிலைகளை ஆராயுங்கால் இதன் கருத்துக்களும் நெறிமுறைகளும் வேதங்களுக்கு வேறுபட்டதாகவே உள்ளன[38] என்று திரு.பி.ஆர். பட் அவர்கள் தெளிவுபடுத்துகின்றார்.

## பாஞ்சராத்திரம்

வைதிகர்கள் பாஞ்சராத்திர நூல்களை உயர்வாக மதிப்பதில்லை. சமூக விருந்துகளில் பரம பாகவதர்களும்; பாஞ்சராத்திர நெறியினை பின்பற்றுவோரும் அமர்ந்துள்ள பந்தியில் வைதீக அந்தணர்கள் அமர மாட்டார்கள் என்றும், பாஞ்சராத்திரம் வேத, விதிக்குப் புறம்பாக உருவ வழிபாடு, கோயிலமைப்பு முதலிய முறைகளை மொழிதலின் அவர்களின் புறக்கணிப்புக்கு ஆளாயிற்று.[38அ] என்றும், இந்நெறி தென்னாட்டில் உருவாகியபழைய

மரபு [38ஆ] என்றும், பேராசிரியர் தாஸ் குப்தா அவர்கள் தம் ஆராய்ச்சியின் முடிவாகக் கருதுகின்றார்.

பாஞ்சராத்திர வழிபாட்டு முறை, தென்னிந்தியாவில் பரவி, மிகச் செல்வாக்குடன் விளங்குகிறது. இது தென்னிந்திய வைணவர்கள் அனைவரும் சமயத்துறையில் கடைபிடித்தொழுகும் பொது நடைமுறையாகவும் திகழ்கின்றது.[39] மேலும் சங்க இலக்கியங்களுள் ஒன்றான பரிபாடல் தொகுப்பில் 1, 2, 3, 4, 13, 15 ஆகியயிடங்களில் பாஞ்சராத்திரத்தின் கருத்துக்கள் இடம் பெற்றுள்ளன.[40]

தமிழகத்தில் வாழ்ந்த ஆழ்வார் பெருமக்களும், பாஞ்சராத்திர ஆகமங்களில் மிக்க ஈடுபாடு கொண்டவர்களாக இருந்தமையால் கோவில் கொண்டெழுந்தருளியுள்ள இறைவன் திருவுருவங்களில் (அர்ச்சாவதாரங்களில்) மிக்க ஈடுபாடு கொண்டு உளம் உருகப் பக்திப் பரவசத்துடன் வணங்கி வழிபாடியாற்றினர்[41] என்பர். தமிழகத்தைச் சார்ந்த இராமானுசரும், தம் விசிட்டாத்வைத தத்துவத்திற்குரிய முக்கிய ஆதாரமாக பாஞ்சராத்திர ஆகமத்தைக் கொண்டுள்ளார்.[42] எனத் தெரியவருகின்றது. மேலும் விசிட்டாத்வைத பக்தித் தத்துவ (Devotional Philosophy) கோட்பாட்டிற்குரிய தேவைகளைப் பூர்த்தி செய்தது ஆழ்வார்களின் பாசுரங்களாகும்.[43]

உருவ வழிபாட்டுக் கொள்கை வேதக் கோட்பாடுகளுக்கு புறம்பானது (Non-Vedie) என்றாலும் கி.பி. 6–ம் நூற்றாண்டிலேயே இவ்வழிபாட்டு முறை பெருவழக்காய் இருந்தது என்பதற்குப் போதிய ஆதாரங்கள் இருக்கின்றன. எனவே, உருவ வழிபாட்டு நெறி எங்ஙனம் தொடங்கிற்று, இதற்குக் காரணமாக இருந்தவர்கள் யாவர் என்பவற்றைக் கூறல் மிகக் கடினமாக உள்ளது. உருவ வழிபாட்டை மேற்கொண்டோர்க்கும் வைதீகர்களுக்கும் இடையில் நெடுங்காலம் கருத்து வேறுபாடுகள் இருந்திருக்க வேண்டும் எனத் தோன்றுகிறது.

மேலும் கி.பி. 2–ம் நூற்றாண்டிலேயே பாகவத நெறி, தென்னிந்தியாவில் மட்டுமின்றி வட இந்தியாவிலும் சிறப்புடன் பரவி இருந்தது.[44] பல்வேறு தெய்வங்களுள் ஒருவராகக் குறிப்பிடப்பட்டுள்ள விஷ்ணுவின் மூன்று காலடிச் சிறப்பு; பேருருவம் பற்றியகுறிப்புக்கள் வேதங்களில் உள்ளன. இதிகாசங்களுள் ஒன்றான மகாபாரதத்தில், நாரத[9] முனிவரின் முன் தோன்றிய நாராயணன், வாசுதேவ சமயத்தினைப் பற்றியும், வியூகங்களைப் பற்றியும் விளக்கியதோடு, இனி வாசுதேவன் எடுக்க இருக்கும் அவதாரங்களைப் பற்றியும், பர பிரும்மமான நாராயணன் தனது நான்கு வியூகங்களில் ஒன்றான வாசுதேவனேதான்[45] என்று விளக்கியதாகவும் கூறப்படுவதிலிருந்து விஷ்ணுவுடன் நாராயணனை இணைத்துப் பரம்பொருளாகக்கொள்ளும் மரபு தோன்றியதாகத் தெரிகிறது. இதனால் நாராயணீயம் என்ற பெயர், வைணவத்தைக் குறிப்பதாகக் கொள்வர்.

பகவத் கீதை 4:6; 4:7; 4:8 ஆகிய பகுதிகளில் முறையே (1) தானேபரம் பொருள் (2) அவதார காரணன்; (3) அவதாரத்திற்குரிய காரணம் ஆகியவற்றையும்; 18:66–ம் பகுதியில், வைணவத்தின் உயர்கோட்பாடாகக்கொள்ளப்படும் சரணாகதி – பிரபத்தியையும் கண்ணபிரான் குறிப்பிடுகின்றார். இக்காலத்தில் கண்ணபிரானை, விஷ்ணுவாக வழிபடும் மரபு ஏற்பட்டதாகத் தெரிகிறது. இந்திரனைக் கண்ணபிரான் வென்றது என்பதை, வேதமரபாகிய ஆஸ்திகம் குன்றிக் கண்ணன் வழிபாட்டு நெறியே மேலோங்கியதைக் குறிப்பதாக உள்ளது. மேலும் பாகவதம்; சாத்வதம் என்பன கண்பிரானை வழிபடும் நெறிகள் என்றே குறிப்பிடுகின்றனர்: இதிலிருந்து, காலப்போக்கில், விஷ்ணு – நாராயணர்களுடன் ஆயர்பாடிக் கண்ணனை இணைத்து வைணவம் வளர்ச்சியுற்ற நிலையைக் காண முடிகின்றது.

தற்கால வைணவத்தில் மிக்க செல்வாக்குப் பெற்றுத்திகழும் பாஞ்சராத்த ஆகமம், வேத நெறிக்கப் புறம்பானது. சரியை (சீலம்); கிரியை (நோன்பு) யோகம் (செறிவு) ஞானம் (மெய்யறிவு)

ஆகியவற்றையும், இறைநிலைகளைப்பற்றியும் கூறுகிறது. பரிபாடல் போன்ற பழைய தமிழ் நூல்களில் பாஞ்சராத்திர ஆகமக் கருத்துக்கள் இடம் பெற்றுள்ளன; இறைவனின் திருஉருவங்களில் (அர்ச்சைகளில்) மிக்க ஈடுபாடுகொண்ட ஆழ்வார்கள் பக்திபரவசத்துடன் வழிபட்டு, மங்களாசாசனம் செய்து, பக்தி நெறியைப் பரப்பினர்; இராமானுஜர் தமது விசிட்டாத்வைத தத்துவத்திற்குரிய முக்கிய ஆதாரமாக இவ்வாகமத்தைக் கொண்டார் என்பனவற்றிலிருந்தும் வைணவ சமயம் – தத்துவம் ஆகியவற்றில் இதன் உயரிய பங்கு தெரியவருகிறது.

டாக்டர் எஸ். இராதாகிருஷ்ணன் அவர்கள் "வைணவத்தின் அடிப்படை ஆதார நிலையை ரிக்வேதத்திலும்[46] வைணவர்கள், பாகவதர்கள் ஆகியோர்களது ஆழ்ந்த பக்தி நிலைக்குரிய அறிகுறியை வேதகால வருணன் வழிபாட்டிலிருந்தும் காண முடியும் [47] என்று குறிப்பிடுகின்றார். ஆனால் வைணவம் என்பதற்கு அடிப்படையான "விஷ்ணு" எனும் சொல்லே "விண்" என்ற தமிழ்ச் சொல்லுடன் தொடர்புடையது என்றும் விண்ணவன் (SKY-GOD)... என்றும் திராவிடர்களின் தெய்வத்தினிடம் கொண்ட பற்றுதல் காரணமாக இந்தோ–ஆரியமொழி அல்லது பிராகிருதமொழி இவ்வமைப்பைப் பெற்றிருக்கக் கூடும் [48] என்று திரு.எஸ்.கே. சட்டர்ஜி அவர்கள் குறிப்பிடுகின்றார், இவ்விரு பெருமக்கிளன் கருத்துக்களும் சிந்தனைக்குரியவைகளாக உள்ளன.

இந்து சமயப் பிரிவுகள் மக்களது வாழ்க்கைக்கு ஒரு குறிக்கோளையும் அதனை அடையும் வழிகளையும் நல்கி அவர்களது வேண்டுகோள்களைப் பூர்த்தி செய்து ஈடேற்றவல்ல ஒரு முழு முதற் கடவுளைப் பற்றுக்கோடாகக் கொண்டவை. பெரும்பாலும் சமயங்கள் கடவுட்கொள்கைகளாகவே இருந்து வருகின்றன. ஆனால் தத்துவ ஞானம், இப்பிரபஞ்சத்தின் இயல்பையும் அதன் மூலத்தையும் ஆராய்வதாக உள்ளது. எனவே தத்துவ ஆராய்ச்சியின் முடிவு வேறு,

சமயத்தின் முடிவுவேறு என்ற நிலையிலிருந்து, இரு துறைகளையும் ஒன்றுபடுத்தித் தத்துவ ஆராய்ச்சியின் முடிவாகிய மூலப்பொருளும், சமயங்கள் கூறும் முழு முதற் கடவுளும் ஒன்றே எனக்கொள்ளச் சில அறிஞர்கள் விரும்பினர். இதுவே இராமானுஞ்சரது விசிட்டாத்வைதக் கொள்கையும், சைவ சித்தாந்தமும் தோன்றிய வரலாறு [49] என்பர். உலகம் – உயிர் – இறைவன் எனும் முப்பொருள் பற்றிய விளக்கங்களைக் கொண்டுள்ளவைகளே இவைகள் விசிட்டாத்வைதம், வைணவ சமயத்துவமாகவும், சைவசித்தாந்தம் சைவ சமயத்தத்துவமாகவும் திகழ்கின்றன.

ஞானத்தின் மேல் உள்ள பற்றே தத்துவ ஞானம் எனப்படும். அது உள் பொருளின் தன்மை பற்றி அறிவு முதல் ஆராய்ச்சி (Regional Enquiry) ஆகும். இந்தியத் தத்துவ முறையில் சங்கரரது அத்வைதமும், இராமனுசரது விசிட்டாத் வைதமும் குறிப்பிடத் தக்கவைகளாகக் கொள்ளலாம். எல்லா வேதாந்தக் கிளைகளும் வேதாந்த சூத்திரத்தோடு உபநிடதங்களையும் பகவத் கீதையையும் ஆதாரமாகக் கொள்ளுகின்றன. இம்மூன்று நூல்களும் (பிரஸ்தானத்திரயம்) வேதாந்த முறைக்கு அடிப்படையாய் அமைந்துள்ளன. இராமானுசருக்கு முன் வாழ்ந்த சங்கரர் (கி.பி. 8ஆம் நூற்றாண்டு) வேதாந்த சூத்திரத்திற்கு எழுதிய விளக்கமே "மாபாடியம்". இவரது விளக்கத்தின்படி பிரமம் என்று சொல்லப்படுகின்ற சார்பற்ற பரம்பொருளே உண்மையான பரம்பொருளாகும். ஆன்மா பற்றிய இருமையின்மைக் கொள்கையே (Non-dualism)... அத்வைதம் போதிக்கும் அடிப்படைக் கொள்கையாகும். பிரமம் உண்மையான பொருள்; இந்த உலகம் ஒரு தோற்றமே; ஒவ்வோர் ஆன்மாவும் பிரமந்தான் என்கிறார் சங்கரர். [49] சங்கரர் போலவே இராமானுசரும் பிரமசூத்திரம் எனும் வேதாந்த சூத்திரத்திற்கு அரிய விரிவுரை எழுதியுள்ளார். இது ஸ்ரீபாஷ்யம் என வழங்குகின்றது. இவரது கொள்கையைக் கூறும் வேதாந்தமே விசிட்டாத்வைதம் ஆகும். இவரது

விளக்கத்தின்படி இறைவன் – உயிர் – உலகம் ஆகிய மூன்றும் உண்மையாகும்; உயிரும் உலகமும் மாயை அல்ல என்பதாகும். பிரம்மத்தை நிர்க்குண பிரம்மம் சகுண பிரம்மம் என்று சங்கரர் பிரித்தாலும் சகுணபிரம்மத்தை மாயையின் தோற்றம் என்கிறார். ஆனால் இராமனுசர் சகுண பிரம்மம் ஒன்றுதான் முழுதற் பரம்பொருள்; நிர்க்குணம் என்று சொல்லும்பொழுது கெட்ட குணங்கள் இல்லை என்ற கருத்தைக் கொள்ளுகிறார்.

தத்துவ நோக்கில் விசிட்டாத்வைதம் என்றும், சமய நோக்கில் ஸ்ரீ வைஷ்ணவம் என்றும் கொள்ளப்படுகிறது.[50] பிரம்மம் பல்வேறு குணங்களையுடைய ஒரு பொருள். அக்குணங்களே பல்வேறு பொருளாயமைந்துள்ளன. இவ்வாறு குணங்களைப் பெற்ற காரணத்தினால், பிரமம் விசிட்டம் (விசேடணங்களோடு கூடியது) என்று குறிப்பிடப்படுகிறது.[57]

## விசிட்டாத்வைதம்

தென்னிந்தியாவில் வைணவம் மிகத் தொன்மையான காலமுதல் பாகவதமரபு நிலையில் இருந்தது. இதற்கு இராமானுசர் தத்துவ வடிவம் கொடுத்து அதனை உயர்நிலையில் சமயத்தத்துவம் ஆக்கினார்.[52] இராமானுசர் தமது தத்துவ விளக்கத்திற்கு வேதங்கள், உபநிடதங்கள், மகாபாரதம், பகவத்கீதை, புராணங்கள், பாஞ்சராத்திர ஆகமம்; ஆழ்வார்களின் பாசுரங்கள் ஆகியவற்றை ஆதாரங்களாகக் கொண்டார். வடமொழியில் உள்ள பிரத்தான திரையங்களும் ஆழ்வார் பாசுரங்களும் விசிட்டாத்வைத முறைமையின் அடிப்படையில் அமைவதால், இராமானுசரின் இத்தத்துவ முறைக்கு உபயவேதாந்தம் எனும் பெயர் வழங்கலாயிற்று.[53]

விசிட்டாத்வைத தத்துவம் (1) பிரமாண (அறிவு ஆய்வு இயல் – Epistomology (2) பிரம்மனின் இயல்பு (மெய்ப் பொருள் மூல ஆராய்ச்சி இயல் - Ontology) (3) ஜகத்தின் இயல்பு (உலகின் இயல்பு

- Cosmology) (4) ஜீவனின் இயல்பு (ஆன்ம இயல்பு– Psychology) (5) ஹிதத்தின் இயல்பு (நெறி – The Way) (6) புருஷார்த்தத்தின் இயல்பு (பயன் – The Goal) ஆகிய பகுதிகளில் விளக்கப்பட்டுள்ளது.

விசிட்டாத்வைதத்தில் அடிப்படைத் தத்துவங்களாக உள்ளவை மூன்று. அவை (1) இறைவன் (2) ஆன்மா (3) உலகம் என்பனவாகும். இம் மூன்றும் அடிப்படைத் தத்துவங்களாகக் கருதப் படுவதால் "தத்துவத்திரயம்" எனும் பெயர் இவற்றிற்கு வழங்கப்படுகிறது.[54] இம் மூன்று தத்துவங்களில்

(1) பிரபஞ்சதத்துவத்தை உலகு இயல்பிலும் (Cosmology)
(2) ஆன்மதத்துவத்தை உளவியலிலும் (Psychology of Jiva)
(3) இறைமைக் கொள்கையை (Theism Ontology) என்பதிலும் காணலாம்.

## இறைவன் (பிரம்மம்)

அத்வைதமும் துவைதமும் அற்று, ஆனால் இரண்டும் கொண்டு ஒருமைக் கொள்கை (Monism) யையும், இருமைக்கொள்கை (Dualism) யையும் "விசிட்டம்" என்ற சொல்லோடு இணைக்கிறது. விசிட்டாத்வைதம். ஒரே கடவுள் பல குணங்களோடு இணைத்திருக்கும் நிலையை இது விளக்குகிறது. உண்மையான உலகின் – உண்மையான, அனைத்தும் தெரிந்த, ஒரு ஆட்சியாளாரகக் கடவுளைக் கொள்ளுகின்றனர். ஆன்மாவை உள்ளிருந்து இயக்கக் கூடிய "அந்தர்யாமின்" என்ற நிலையில் எங்கும் வியாபித்துள்ளார். மங்கள குணங்கள் நிறையக்கொண்டு சத்தியம், ஞானம், ஆனந்தம் என்ற உண்மை, அறிவு, ஆனந்தமாக இருப்பதுதான் சகுணபிரம்மம். பொருளும் ஆன்மாவும் அவரைத்தான் நம்பியுள்ளன. உலகின் ஆதாரமாகவும் ஆன்மாக்களின் தலைவராகவும் உள்ளவர். இராமானுசர், கடவுளாகிய சகுணபிரம்மத்தை விஷ்ணு நாராயணனுடன் இணைத்துக்கொள்கிறார். வை குண்டத்தில் வாழ்பவராகவும் இலட்சுமி

நாயகனாகவும், உலகப் பொருட்களில் கலந்தும் – அவற்றிற்கு வேறாக அப்பாற்பட்டும், பிரளயகாலத்தில் உலகம் அவரிடம் ஒடுங்குவதற்கும் ஏற்றவராக உள்ளார்.

பர, வியூக, விபவ, அர்ச்சை, அந்தர்யாமின் என்ற ஐந்து வடிவங்களில் கடவுள் காணப்படுகிறார். [54]

## ஆன்மா

ஒரு உயர்வுள்ள பொருள் (Conscious entity) கடவுளின் சாரம் (Essence) என்று ஆன்மாவைக் குறிப்பிடுகின்றனர். தன்னறிவும், மாறுபாடின்மையும், பகுதியுற்றும், அணுவடிவாயும் உள்ளது. இறைவனின் அம்சமாக இருப்பினும், இறைவனிடமிருந்து வேறுபட்டது. பிரமத்திடமிருந்து வெளிப்பட்டிருப்பினும் பிரம்மத்தை விட்டு என்றும் வெளியேறா விடினும், தனிப்பட்ட அருமைத்தன்மை கொண்டு விளங்குகிறது. ஆன்மாக்கள் எண்ணிக்கையில் அடங்காதவை. அவற்றை மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம். (1) என்றுமுள்ள (நித்திய) ஜீவன்கள். இவை ஒரு போதும் அடிமைத்தளையில் சிக்காதவை. (2) விடுதலை பெற்ற (முக்த) ஆன்மாக்கள். இவைகள் ஏற்கனவே மீட்புப் பெற்றவிட்டன (3) அடிமைத்தனையில் சிக்கியுள்ள (பந்த) ஆன்மாக்கள். இவை சமுசாரச் சூழலில் அகப்பட்டவை. மூன்றாம் வகை ஆன்மாக்கள் வீடுபேறடையும் வரை பிறவி கொண்டே இருப்பவை. [56] நித்தியர்கள் என்றும் வைகுண்டத்தில் இறைவனுடன் இருப்பவர்கள்; முக்தர்கள், சம்சாரமாகிய துன்பத்தில் மூழ்கி இறையருளால் விடுதலை பெற்று இறைவனைப் பற்றியவர்கள். இறைவனும் ஆன்மாவும் பிரிக்க முடியாத உறவுடையவை [57] என்பது இராமானுஞ்சரது விளக்கமாகும்.

## உலகு

உலகம் என்பது பொருள்கள் வடிவமாகவும், ஆன்மாக்களாகவும், பிரம்மத்தின் உண்மைப் பகுதிகளாகவும்

உள்ளதேயன்றி உண்மையற்றமாயை (Unreal - Maya) அல்ல. இறைவனின் உடலாக உள்ள உலகு உணர்வற்ற (Non-Conscious Achit ) பொருளாகவும் உள்ளது. பரிணாம வளர்ச்சியில் மாற்றம் ஏற்படுகிறது. ஆனால் பிரளய காலத்தில் இறைவனிடம் நுண்ணிய கூறுகளாக வந்தடைகின்றன. எனவே என்றும் உள்ள பொருளாக, ஆனால் இறைவனையே நம்பிய பொருளாக உலகப் பொருட்கள் உள்ளன. ஆன்மாக்களின் கரும விதிகளுக்கேற்ப நன்மை தீமைகள் வந்தடைகின்றன. அவை ஆன்மாக்களின் அனுபவங்களுக்குத் துணை புரிகின்றன. சத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்கள் இருப்பினும் இறைவனது உடல் சுத்த தத்துவமாக (சத்வகுணமாக) – நித்தியவிபூதியாக (என்றுமுள்ள அசாதாரண சக்தியாக) உள்ளது. வெளிப்பட்ட உலகம் அவரது லீலா விபூதியாகும்.

ஆன்மாவுக்கும் (சரீரி) உடலுக்கும் (சரீரம்) உள்ள தொடர்பைப் போன்றதே கடவுளுக்கும், ஆன்மாக்களாலும் உடற் பொருளாலும் ஆன உலகத்திற்கும் உள்ள தொடர்பு கடவுள் ஆன்மாக்களின் ஆன்மாவாகவும், இயற்கையின் ஆன்மாவாகவும் இருக்கிறார்.[58]

## ஹிதம் - கடவுளை அடையும் வழி [ The means]

கடவுளை அடையும் வழிகளுள் மூன்று முக்கிய வழிகள் சிறப்பாகக் கூறப்படுகின்றன. அவை (1) கரும யோகம் (2) பக்தி யோகம் (3) ஞான யோகம் என்பவை. கரும யோகம் – தன்னலமற்ற சேவை மார்க்கமாகும். பக்தியோகம் அன்பு வழியாகும். ஞானயோகம் அறிவு மார்க்கமாகும். ஆனால் விசிட்டாத்வைதம் இறைவனையே தஞ்சம் என்று கொண்டு அவனை முற்றிலும் சரணடைதலாகிய பிரபத்தி மார்க்கத்தையே வலியுறுத்துகின்றது.[14]

## முக்திநிலை

உலகப் பந்தங்களில் நிலை தடுமாறும் ஆன்மாக்கள் அவற்றினின்று விடுபட்டு வைகுண்டத்தில் இருக்கும் நிலையே முக்தி எனப்படுகிறது. இறைவனுடன் என்றும் பிரியாத அவனுடனே இருக்கும் நிலையாகும். உண்மையின் சொருபத்தை ஆன்மா இந்நிலையில் அடைகிறது. இறைவனுக்குத் தொண்டு செய்தோ அல்லது தியானத்தில் ஈடுபட்டோ வாழ்கிறது. தனது தனித்தன்மையை என்றும் இழப்பதில்லை. ஜீவன் முக்தி என்ற நிலை இராமானுசரது கொள்கைப்படி இல்லை. உடலை விட்டு ஆன்மா விலகும் போதே முக்தி கிட்டுகிறது. பக்தி செலுத்தி இறையருளைப் பெற்றவர்க்கே இறுதியில் மேல்நிலை கிட்டுகிறது. பிரபத்தி என்ற நிலையில் முழுதும் தன்னை இறைபணிக்கும் வழிபாட்டிற்கும் அர்ப்பணித்துக் கொண்டவர்களுக்கே முக்தி கிட்டும். அதற்கு கர்மாவும் ஞானமும் இணைந்து செயல்பட வேண்டும் என்பதே ,விசிட்டாத்வைதக் கோட்பாடாகும்.[60]

# 1.1. வைணவ சமயம் வசிட்டாத்வைத தத்துவம்

## வைணவ சமயம் அடிக்குறிப்பு


1. இராகவையங்கார் மு: ஆழ்வார்களின் காலநிலை: பக.2
2. தேவசேனாபதி. வ.ஆ தமிழ்க்கலைக் களஞ்சியம் – தொகுத் 4: பக்.4
3. James Hastings - Eneyelopaedia of Religion and Ethics. p.6
4. மகாதேவன் டி.எம்.பி. இந்து சமயத் தத்துவம் பக்.13.
5. Radhakrishnan S. - Indian Philosophy Vol.I - P.57
6. அகம் –70: 13–16, புறம் 378: 18–21
7. ஷை – முல் – 8 : 12 –15
   ஷை – ஷை – 1 : 18 –20 ஷை ஷை – 4 : 57–59:
   ஷை – குறி – 16 : 2 –3
8. பரி. பா – 3: 33 – 34
   ஷை – 13: 26 – 29
   பெரும்பா. ஆ. படை – 37 – 373
   ஷை . . . . . . . 402 – 404
   மது காஞ் – 509 –591 ; 793
   அகம் – 59: 3 – 6
   ஷை – 360 : 6 – 9
   புறம் 56 : 3 – 4
   முல். பாட். 1 – 3
   பரிபா – 2 : 20 – 23
   ஷை – 4 : 12 – 21
9. முல். பா – தனி 1 –4
10. Barth. A - The Religions of India ; p.116
11. Chattarji S. K. - The History and culture of the - Indian peopl - Vol. I - p.157-158.
12. Ramananujam B V: History of vaishnavism in South India up to Ramanujam -p.120

13. Radha Krishnan S; Indian philosophy - Vol. I. p.81
14. Ibid p.78
15. Chattarji S.K.: The History and culture of the Indian people Vol. I. p.162
16. Ramanujam. B.V. - The History of vaishnavism in South India up to Ramanuja - p.120
17. Ibid - p.120
18. Radhakrishnan. S - Indian philosophy - Vol. I-p.406
19. Jidendranath Banerji - Development of Hindu I conography p.386
20. Jadunath suiha - The Cultural Heritage of India Vol IV - p.146
21. Bhatt. S.R. - The Philosophy of Panearatra - and Advaitic Approch p.6
22. Ibid - p.647
23. Ibid - p.38
24. Ibid - p.39
25. Ibid - p.40
26. Ibid - p.40
27. Ibid - p.41
28. மகாதேவன் டி.எம்.பி. – இந்து சமயத் தத்துவம் – பக்.177.
29. Trevorting - A History of Religion East and West p.117
30. Ibid - p.147
31. Dines Chandra Sirear - The cultural Heritage of India Vol.IV p.129
32. Radhakrishnan. S; The Indian philosophy - Vol.I p.485
33. வேங்கடாச்சாரி கே.கே. பாஞ்சராத்ர நூல் விளக்கம் – பக்.17.
34. ஷை பக். XIX
35. Radhakrishnan. S - Indian Philosophy -Vol.I - p.497
36. மகாதேவன் டி.எம்.பி. இந்து சமயதத்துவம் – பக்.178
37. பக. கீதை. 18 . 66
38. Surendranath Dasguplea - Hist of Indian philosophy p. 14-15 p.p. 18-19.
39. Krishnaswamy Aiyangar. S; Aneient India and South Indian History of Culture -p.805

40. Ibid p.806
41. Varadachari. Kee - Alvars of South India - p.IX
42. Anima sen Gupta - A critical study of the philosophy of Ramanuja - p.18
43. Ibid - p.19
44. Surendranath Das Gupta - History of Indian philosophy Vol.II p.19
45. Bhandarkar. R.G. Vaishnavism; Saism and other minor Religious systems - p.8
46. Radhakrishnan. S; Indian philosophy - Vol. I p.81
47. Ibid p.78
48. Chattarji. S.K. The History and Culture of the Indian people - vol. I - p.162

*விசிட்டாத்வைத தத்துவம் - விளக்கம். அடிக்குறிப்பு*

49. லஷ்மணன்.கி. இந்திய தத்துவ ஞானம் – பக் 304 –305
50. மகாதேவன் டி.எம்.பி. – இந்து சமயத் தத்துவம் – பக்.130–131
51. Yamunacherya. M - Ramanujar Trechings on His own words - p.40
52. Anima Sen Gupta - A critical study of the philosophy of Ramanuja - p.7-8
53. மகாதேவன் டி.எம்.பி – இந்து சமயத் தத்துவம் பக்.139
54. Chandradhar Sharma - A critical Survey of Indian philosophy - p.346.
55. Radhakrishnan. S - Indian philosophy -Vol. II p.346
56. மகாதேவன் டி.எம்.பி. இந்து சமயத் தத்துவம் – பக.142
57. Anima Sen Gupta - A critical Study of the philosophy of Ramanuja - p.104.
58. Srinivasacheri P.N. - The philosophy of Visistadvaita -p.273
59. Anima sen Gupta - A critical study of the philosophy of Ramanuja - p. XXII
60. Yamunacharya. M. Ramanujas Teachings on His own words pp. 52-54.

# 2. சாத்திரமும் தோத்திரமும் - வைணவம்

## ஆழ்வார்களும் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தமும்

### இயல்-2

### 2.1

தமிழக வரலாற்றில் சமய எழுச்சிக் காலம் எனக் கருதப்படுவது பல்லவர் காலமாகும். இக்காலத்தில் தென்னிந்தியாவிலுள்ள பல்வேறு அரசுகளும் தத்தம் வருங்கால வாழ்வை உருப்படுத்திக் கொண்டிருந்த அதே வேளையில் தமிழ் நாட்டில் சமயப் புத்துணர்ச்சி பொங்கி எழுந்தது. தென்னிந்திய வைதீக இந்துக்கள், தமிழ்நாட்டில் புகுந்த சமணம், பௌத்தம் ஆகிய வேறு இரு சமயங்களுக்கு இடையில் தங்களுடைய நிலையைக் கண்டு அச்சமும் அவநம்பிக்கையும் கொண்டனர் எனத் தோன்றுகிறது. இவைகளே சமயப் பற்றின் வளர்ச்சிக்கு வழிகோலின என்றும் அவ்வளர்ச்சியே பக்தி இயக்கத்தைப் படைத்தது என்றும் கொள்ளலாம். இது, ஏறத்தாழ, கி.பி.9-ஆம் நூற்றாண்டு இறுதிவரை நிலைத்து நின்றது. இந்தச் சமயப் பற்றாகிய அலை உண்மையான பக்தியையே பெரிதும் வற்புறுத்தியது. புனிதரும் அடியாரும் புடைத்தெழுந்தனர்; புண்ணிய தலங்களுக்கும் திருக்கோவில்களுக்கும் சென்றனர்; இனிய தெய்வப் பாடல்களைப் பாடினர்; துன்பங்களிலிருந்து மக்களை ஈடேற்றும் மாண்புடைய அருள்வடிவான இறைவன்பால் பக்தி வெள்ளம் பெருக்கெடுத்து ஓடியது. இந்த பக்தி இயக்கமானது, சைவ-வைணவ சமயத்தினர்பால் ஒரே காலத்தில் ஒருங்கே தலை தூக்கியது என்பதை வரலாறு தெளிவுறுத்துகின்றது. சைவம் ஆகம நூல்களையும், வைணவம் பாஞ்சராத்திரத்தையும் ஆதாரத்திருநூல்களாகக் கொண்டன. வேதத்தை ! பொது நூலாக இவை ஏற்றபோதும், அவ்விரு பிரிவினருக்குமிடையே இருந்த வேறுபாடுகளைக் காட்டுவனவாக

இத்திரு நூல்கள் அமைந்தன எனக் கொள்ளத் தடையில்லை. பல்லவர் காலத்தில் ஏற்பட்டட இத்தகைய வளர்ச்சியை சமய மறுமலர்ச்சி எனப் பொருந்தும்.

தமிழில் தனிப் பெருஞ்சிறப்பாகத் திகழும் பக்திப் பனுவல்களை அருளிய சிவனடியார்களான நாயன்மார்களும், திருமால் அடியார்களான ஆழ்வார்களும் தோன்றிய காலத்தும் அதற்கு முன்னும் ஒருவாறு நிலைபெற்றிருந்த சமணமும் பௌத்தமும் தமிழ் நாட்டிப் பரவியிருந்தன. சைவமும், வைணவமும் பேராக்கமுற்று, தமிழ் மக்களின் உள்ளத்தைக் கவர்ந்து, அவ்விருமதங்களின் ஆதிக்கத்தை அகற்றின. வலியற்றுப்போன போதிலும் அம்மதங்களைச் சார்ந்தவர்களின் இலக்கியப் பணி நிகழ்ந்தது என்பதை வரலாறு காட்டுகிறது. சமயச் சிந்தனைகளில் அறவுணர்வும் தத்துவ ஆராய்ச்சியும் முக்கிய இடம் பெற்றதாயினும் வழிபாட்டு முறைகளே பக்தி இலக்கியம் வளர்வதற்குக் காரணம் என்றும்; சமயப் பாடல்கள் தன் அனுபவம், பொது அனுபவம் என்ற இரண்டு நிலைகளிலும் தோன்றலாம் என்பதுடன் இறைவட்டத்தில் வாழ்வோரிடமிருந்து தன் அனுபவப் பாடல்களே தோன்ற முடியுமே தவிரப் பொது அனுபவப் பாடல்கள் தோன்றுவதற்கில்லை; இறைவட்டத்தில் வாழும் கவிஞர்கள் தன் அனுபவம் என்னும் போது அவர்கள் ஞான அனுபவத்தையே குறிப்பிடவேண்டும் என்று ஆராய்ச்சி அறிஞர் ப.அருணாசலம் குறிப்பிடுகின்றார்.[1] இதனால் பக்திப் பயிரை வளர்த்த சைவ, வைணவ அடியார்களின் பாடல்களைத் தன் அனுபவப் பாடல்களாகக் கொள்ளலாம். எனினும் அவற்றை ஆராயப்புகும் அறிஞர் பெருமக்கள் அவற்றில் அவர்களுக்குத் தோன்றும் பொது அனுபவக் கருத்துக்களையும் உள்ளுறைத் தத்துவங்களையும் வெளிப்படுத்துகின்றனர்.

## ஆழ்வார்கள்

வைணவ சமய எழுச்சிக்குக் காரணமான பக்திப் பனுவல்களை அருளிய திருமாலடியார்கள் பன்னிருவர், ஆழ்வார்கள் எனப்படுகின்றனர். திருமாலின் கல்யாண குணங்களிலிலே ஈடுபட்டு அழுந்தினவர் ஆதலின் இப்பெயர் பெற்றனர்; திருமாலின் வடிவழகிலே ஈடுபட்டு அழுந்தினவர்கள் ஆதலின் இப்பெயர் பெற்றனர்; மக்கள் படும் துன்பத்தைக் கண்டு பொறாமல் அத்துக்கத்தில் அழுந்தினவர்கள் ஆழ்வார்கள் – என இவ்வாறெல்லாம் இச்சொல்லிற்குப் பொருள் கொள்ளுவது பெருவழக்கமாக் உள்ளது. இவற்றால் திருமாலின் திருக்கல்யாண குணங்களிலும், அவனது வடிவழகிலும் ஈடுபட்டுப் பக்திப் பெருவெள்ளத்தில் ஆழ்ந்தவர்கள் ஆதலின் ஆழ்வார்களெனப்பட்டனர் எனக் கொள்ளலாம். கடவுளர்க்கும், அடியார்கட்கும் மக்களிற் சிறந்த இருபாலார்க்கும் இப்பெயர் முற்காலத்தே பெருவழக்காயிருந்தது; இச்சொல்லிற்கு சுவாமி; பெரியோர் என்பதே பண்டைப் பொருளாகவேண்டும்; பிறரை அடிமை கொண்டு ஆள்பவர் என்ற பொருளில் ஆள்வார் என வழங்கி வந்தது; பின்பு ழகர–ளகர வேற்றுமையின்றித் திரிந்திருக்கலாம் என்றும்; பெண்பாலரான திருமாலடியார் ஒருவர் ஆண்டாள் என்றும், ஆசாரியத் தலைவர்களிற் சிலர் ஆளவந்தார்; ஆண்டான் என வழங்கப் பெறுவதை நோக்குமிடத்து 'ஆள்' என்பதே இதன் பகுதியாக வேண்டும் என்ற கருத்தும் உள்ளது.[2]

திராவிட நாட்டில் தோன்றிய பக்தி என்ற பெண் கருநாடகம், மகாராஸ்டிரம் ஆகிய மாநிலங்களில் பருவம் அடைந்து, குஜராத் மற்றும் வட இந்தியாவெங்கும் சென்று, பிருந்தாவனத்தில் ஞானம், வைராக்கியம் எனும் இரு குழந்தைகளை ஈன்ற செய்தி பாகவத புராணத்தில் இடம் பெற்றுள்ளன. திருமாலடியார்களான ஆழ்வார்கள் தென்னாட்டில் தாமிரபரணி, வைகை, பாலாறு, காவிரி, பெரியாற்றங்கரைகளில் தோன்றுவர் எனும் இச்செய்தியைக் கூறும்

'பாகவதம்' தென்னாட்டில் எழுந்தது என்றும் தென்னாடு பக்தி வழிபாட்டிற்கு அரண்போன்றது என்றும் அறிஞர் தாஸ்குப்தா குறிப்பிடுகின்றார்.[3]

ஆழ்வார்கள் வரலாறு கூறும் சரித்திர நூல்கள் பல. அவற்றின் இராமானுசர் காலத்திலிருந்த கருடவாகன பண்டிதர் வடமொழியில் இயற்றிய திவ்விய சூரிசரிதை; பின்பழகிய பெருமாள் ஜீயர் அருளிய ஆராயிரப்படி குருபரம்பரை பிரபாவம்; மணவாள மாமுனிகள் அருளிய உபதேச ரத்தினமாலை; கீழையூர், சடகோபதாசர் அருளிச் செய்த அரிசமய தீபம் என்னும் குருபரம்பரை முதலிய நூல்களுண்டு. இவை கூறும் பல செய்திகளும் நிகழ்ச்சிகளும் புராணங்களின் அமைப்பில் உள்ளன. கிருத்து காலத்திற்குப் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னே ஆழ்வார்கள் தோன்றினர் என்றும் ஒவ்வொருவரும் பன்னெடுங்காலம் வாழ்ந்தவரென்றும் இவற்றில் காணப்படுகின்றன. ஆனால், ஆழ்வார்கள் கி.பி.500 முதல் கி.பி. 850 வரையுள்ள காலவரம்பினுள் வாழ்ந்தவர்கள் என்று முடிவாகக் கூற முடியும் என கே.கே. பிள்ளையவர்கள் தெளிவுபடுத்துகின்றார்.[4]

ஆழ்வார்கள் பதின்மர் என்றும், பதினொருவர் என்றும் பன்னிருவர் என்றும் கூறுவர். ஆண்டாள், மதுரகவியாழ்வார் இருவரையும் சேர்க்காது பதின்மர் என்றும்; இவ்விருவருள் ஒருவரைச் சேர்க்காது பதினொருவர் என்றும் கணக்கிடற்குரிய காரணங்கள் வருமாறு;

ஆண்டாள் ஏனைய ஆழ்வார்களைப் போலல்லாது திருமாலைக் கணவராக மட்டும் வரிக்கின்றார் என்பதை அவரைச் சேர்க்காதுவிடற்கு ஒரு நியாயமாகக் காட்டுகின்றனர்.

மதுரகவியாழ்வார் மற்றைய ஆழ்வார்களைப் போல் திருமால் திருவடிகளிற் பக்தி பாராட்டாது, அனைத்தையும் தன் குருவான குருகூர்ச்சடகோபரர்கவே கொண்டு பக்தி செலுத்தி வந்ததை, அவரைச்

சேர்க்காது விடுவதற்குக் காரணம் காட்டுவர்.[5] வேதாந்த தேசிகர், திருவரங்கத்தமுதனார்; பராசரபட்டர்; பின்பழகிய ஜீயர், மணவான மாமுனிகள் ஆகியோர் குறிப்பிடும் ஆழ்வார்கள் எண்ணிக்கையிலும் வைப்பு முறைகளிலும், நாலாயிரத்தில் காணும் வைப்பு முறைகளிலும் வேறுபாடுகளைக் காண முடிகின்றது. (பின்னிணைப்பு 1–ல் கொடுக்கப்பட்டுள்ளது) மாறன் என்றதில் மதுரகவியாழ்வாரின் வரலாறும், பட்ட நாதன் என்றதில் ஆண்டாளின் வரலாறும் அடங்குமாதலின் இவர்கள் வேறாகக் கூறப்பட்டிருக்கும் என்பர்.[6]

மெய்யடியார்களை இறைவனாகவே கருதி வணங்குவதும், தமது ஞான குருவை இறைவனாகக் கொண்டு வழிபடலும் சமயத்துறையில் புதுமையன்று. ஆதலின் மெய்ப்பொருள் அறிவித்தருளிய மெய்யடியாராகிய நம்மாழ்வரையே தன் ஞான குருவாகக் கொண்ட மதுரகவியாழ்வார், அவரையே இறைவனாகத் தன் அனுபவ நிலையில் உணர்ந்து, பாசுரங்களைப் பாடியுள்ளார். எனவே மதுரகவியாரையும், ஆழ்வார்களுள் ஒருவராகக் கொள்வது தவறாகாது.

இறையனுபவ வட்டத்தில் தன்னைத் தலைவியாகவும் இறைவனைத் தலைவனாகவும் கற்பித்து அகத்துறைப் பாடல்களை ஆண்பாலடியார்கள் அருளியுள்ளனர். பிறப்பினாலே உடல், உணர்வு போன்றவற்றில் மென்மைத் தன்மையுடன் திகழும் பெண் பாலடியார்கள் இறைவனைத் தலைவனாகக் கொள்வதும், பாடிப் பரவசப்படுவதும் இயற்கையோடு ஒன்றிய நிலையே. ஆதலின் பெண்பாலடியாராகிய ஆண்டாள் திருமாலைத் தன் காதலனாகக் கொண்டு பாடிப் பரவசமுற்றதும் ஏற்புடைத்தே. நாதமுனிகளும் இவ்விருவர் அருளிச் செயல்களையும் ஏனைய ஆழ்வார்கள் அருளிச் செயல்களுடன் ஒப்பமதித்து நாலாயிரத்துள் சேர்த்துள்ளார். ஆண்டாள், மதுரகவியாழ்வார் இவ்விருவரையும் சேர்த்துப் பன்னிருவர் எனக் கொள்வதே பெருவழக்காயுள்ளது. ஆதலின் ஆழ்வார்களின் வரிசையில் இவர்களையும் ஒப்ப வைத்துக் கணக்கிடுவது சாலப்

பொருந்தும். நாதமுனிகள் இசைப்பா, இயற்பா எனும் அடிப்படையில் பிரபந்தங்களை அடைவுபடுத்திய முறையே நாலாயிரத்திற்கு காணப்படும் வைப்பு முறையேயன்றி ஆழ்வார்களது கால நியமன முறையை மேற்கொண்டதன்று.

ஆழ்வார்களைக் கால அடிப்படையில் பேராசிரியர் தாஸ்குப்தா மூன்று பிரிவுகளாகக் பிரிக்கின்றார்.[7] அவை வருமாறு:-

1) முதலாழ்வார்கள் மூவரும் திருமழிசை யாழ்வாரும் முதற்பிரிவில் அடங்குவர். இவர்கள் தொண்டை நாட்டைச் சார்ந்தோர்.

2) நம்மாழ்வார்; மதுரகவியாழ்வார்; குலசேகராழ்வார்; பெரியாழ்வார்; ஆண்டாள் ஆகியோர் இரண்டாவது பிரிவில் அடங்குவர். சேர நாட்டு மன்னர் மரபைச் சார்ந்த குலசேகராழ்வாரைத் தவிர மற்றையோர் பாண்டிய நாட்டைச் சேர்ந்தவர்கள்.

3) மூன்றாவது பிரிவில் கொள்ளப்படும் தொண்டரடிப் பொடியாழ்வார்; திருப்பாணாழ்வார்; திருமங்கையாழ்வார் ஆகிய மூவரும் சோழ நாட்டினர்.

ஆழ்வார்கள் வருணாசிரமம், அரசன்-ஆண்டி என்பன போன்றவற்றால் கொள்ளப்பெறும் சமுதாய ஏற்றத்தாழ்வுகளைத் தகர்த்தவர்கள் எனத் தெரியவருகிறது. அந்தணர் குலத்தவரான தொண்டரடிப் பொடியாழ்வார் "இழி குலத்தவர்களேனும் எம்மடியார்களாகில் தொழுமின், கொடுமின், கொண்மின் என்றும் "நான்கு வேதங்கள் ஆறு அங்கங்கள் ஆகியவற்றை ஓதியுணர்ந்தவர்களான அந்தணர்களாயினும் திருமாலடியார்களைப் பழிப்பின் நொடிப்பொழுதில் அவர்கள் புலையரைப் போன்றோராவர்"[9] என்றும் கூறுகின்றார். நம்மாழ்வாரும் "நான்கு வருணங்களிலும் இழிந்த சண்டாளர்களாயினும் மணி-வண்ணற்கு ஆள் என உட்கலந்தார் தம் அடியார் எம் அடிகளே"[10] என்பர். வேளாளர் குலத்தில் பிறந்த நம்மாழ்வரை அந்தணர் குலத்தில் பிறந்த மதுரகவியாழ்வார்

தம் குருவாகவும் தெய்வமாகவும் போற்றினார். திருப்பாணாழ்வார் தீண்டப்படாத சாதி எனக் கொள்ளப்பெற்ற வகுப்பைச் சார்ந்தவர். குலசேகரர் சேரமன்னர் குடிப்பிறந்தவர்; திருமங்கையாழ்வார் குறுநிலமன்னர் எனினும் இறைவனையடைதல் என்னும் குறிக்கோள் ஒன்றினையே கொண்டு வாழ்ந்து சமுதாயத்திற்கும் வழிகாட்டி நின்றவர். பிறப்பினாலும், செல்வ வளத்தினாலும் கொள்ளப்பெறும் ஏற்றத் தாழ்வுகளையும், குறை நிறைகளையும் கடந்த நின்ற இப்பெரியோர்களைப் பல்வேறு பிரிவுகளையுடைய மக்களும் தம்முள் நிலவிய அவ்வேற்றத் தாழ்வுகளையும் மறந்தும் துறந்தும் பின்பற்றினராதல் வேண்டும். இதனால் பக்திப் பெருவெள்ளம் வைணவம் என்ற நதியாக ஓடிச் சமயத்தையும் வளர்த்து தமிழ் நாகரிகத்தையும் எழிலுறச் செய்தது என்பது தெரிகின்றது. இந்த பக்திப் பெருவெள்ளத்தைக் கொண்டு ஆழ்வார்கள் மக்களையும், நாட்டையும் சீர்மையுறச் செய்தவர் எனின் தவறாகாது. பிரபந்தப் பாடல்கள் உறங்கிக் கிடந்த பக்தியுணர்ச்சியைத் தட்டியெழுப்பின. இவை மனித உணர்ச்சிகளும் கலைச்சுவையும் மிகுதியாகக் கொண்டு திகழ்கின்றன. இறைவட்டம்; ஆத்தும சிந்தனை; வாழ்க்கையின் உயிர் பிரச்சினைகள் ஆகியவற்றை குறித்து இசைச் சுவையுடனும் கவிச்சுவையுடனும் இவற்றைப் பாடி அருளினர். ஆழ்வார்கள் அன்புக் கடவுளைக் கோவிலிலும் கண்டனர், தலமாகவும் கண்டனர், உலகமாகவும் உயிர்களாகவும் கண்டனர்; தந்தையாகவும், தாயாகவும், குழந்தையாகவும் நண்பனாகவும், தலைவனாகவும் கொண்டு போற்றினர்; காதலனாகப் பாவித்துக் காதற்பாடல்களும் பாடினர். இவர்களது வைணவ பக்தி இயக்கம் காஞ்சியைத் தலைநகராகக் கொண்ட தொண்டை மண்டலத்தில் தோன்றி தென்பாண்டி நாடுவரை பரவி நின்றது. பிறகு வடநாட்டிற்கும் சென்றது. மக்களின் ஆத்ம தாபத்தினையும், பக்திதாகத்தினையும் ஆழ்வார் பாசுரங்கள் போக்கின என்று வைணவப் பெரியார் பி.ஸ்ரீ அவர்கள் குறிப்பிடுகின்றார்.[11] கடல் நீரையெல்லாம் மேகமானது பயன்படுத்திக், கொள்ளற்குரிய தூய

நீராய்ப் பொழிவது போன்று ஆழ்வார்களாய காளமேகம் அருமறையின் பொருளை ஆய்ந்தெடுத்துச் செந்தமிழ் கொண்டு உலகோர்க்கு உதவியுள்ளது. இறைவன் ஆழ்வார்களுக்குத் தன்னைக் காட்டிக்கொடுத்து அனுபவிக்கச் செய்த அவ்வனுப மேலீட்டினால் அவர்களிடமிருந்து வழிந்து ஓடிவந்தவைகளே பிரபந்தப் பாசுரங்கள் என்பது வைணவர்களின் நம்பிக்கையாகும். ஈரமற்ற நெஞ்சத்தையும் தன் கடினத்தன்மையை மாற்றி நீராயுருக்கிப் பரவசப்படுத்தும் பான்மை கொண்டு திகழும் ஆழ்வார்களின் அருளிச் செயலை ஈரத்தமிழ் என்பர் பெருமக்கள்.

## நாதமுனிகளும் திவ்வியப் பிரபந்தமும்

திருவாய் மொழியின் பத்துப்பாடல்களை மட்டும் அறிந்த இரண்டு வைணவத் திருநாமங்கள், வீரநாராயணபுரத்துக் கோயில் கொண்ட பெருமாளை வணங்கி 'ஆராவமுதே' என்று தொடங்கி, குற்றம்வராமல் அருளிச் செய்த பதிகத்தை 'ஆயிரத்துளிப்பதீது' என்று பாடக்கேட்ட நாதமுனிகள், முழுமையும் அறிந்திருக்கிறீர்களா என அவர்களை வினாவினார். அப்பாசுரங்களை மட்டுமே அறிந்திருந்த அவர்கள், தங்களிடத்தன்றிப் பூமியில் வேறெவரிடத்தும் நாங்கள் பாடியவற்றைப் பெறுதற்கரிது என்றனர்; அப்பாடல்களின் உட்பொருளையெல்லாம் சுவையுடன் அறிந்த நாதமுனிகள், அருளிச் செயல்கள் அனைத்தையும் தேடியடைய முற்பட்டு, நம்மாழ்வார் அவதரித்த திருக்குருகூர்வந்தடைந்து, பராங்குசதாசரிடம் நம்மாழ்வார் மீது மதுரகவியாழ்வார் பாடிய 'கண்ணி நுண் சிறுத்தாம்பு' எனத்தொடங்கும் பாசுரங்களையறிந்தார்; திருப்புளியாழ்வார் அடியில் அர்ச்சையாக எழுந்தருளியிருந்த நம்மாழ்வாரின் திருவடிகளை வணங்கி மதுரகவியாரின் பாசுரங்களைப் பன்னீராயிரம் உரு அனுசந்தித்தார்; அதன்பின் நான்காயிருக்கும் தமிழ்வேதத்தையும் அதன் எல்லாப் பொருள்களையும் அருளியபின் ஏனைய ஆழ்வார்களது பிரபந்தங்களையும் எட்டெழுத்துத் திருமந்திரத்தையும் நம்மாழ்வார்

உபதேசித்தருளினார் –என இவ்வரலாற்றைக் குருபரம்பரை கூறுகின்றது.[12] அவற்றை, வேதவியாசர் வேதங்களை நான்காக வகுத்தது போல் வகுத்து, தம்முடைய மருமக்களான மேலையகத்தாழ்வார்; கீழையகத்தாழ்வார் ஆகியோரைக் கொண்டு பாசுரங்களுக்குப் பண்களை ஏற்படுத்தினார் என்பர்[13] பாசுரங்களை இசைப்பா, இயற்பா என அடைவு படுத்தினார் என்றும் அம்முறையே நாலாயிரத் திவ்வியப்பிரபந்தத்தில் காணக்கிடக்கின்றது என்பர்.

## *திவ்வியப் பிரபந்தமும் நாலாயிரக்கணக்கும்*

ஆழ்வார்கள் அருளிய பாசுரங்களின் மொத்த எண்ணிக்கை மூன்று விதமாகக் கணக்கிடப்படுகின்றது. முதலாயிரத்தில் 947 பாடல்கள், இரண்டாம் ஆயிரத்தில் 1134 பாடல்கள், நான்காம் ஆயிரத்தில் 1102 பாடல்கள் என்பதில் கருத்து வேறுபாடில்லை. மூன்றாம் ஆயிரத்துள் அடங்கிய பத்துப் பிரபந்தங்களடங்கிய பாசுரக்கணக்கில் மட்டும் கருத்து வேறுபாடுள்ளது. இதற்குக் காரணம் **(1)** திருமங்கையாழ்வார் அருளிய சிறிய திருமடல்; பெரிய திருமடல் ஆகியவற்றைத் தமிழ் இலக்கணத்தின் அடிப்படையில் ஒவ்வொரு கலிவெண்பாவாகக் கொண்டு பாசுரங்களின் எண்ணிக்கையை 593 என்றும்,

**(2)** இதன் ஒவ்வொரு கண்ணியையும் ஒவ்வொரு பாசுரமாகக்கொண்டு முறையே, 77½, 148½ எனக்கணக்கிட்டுப் பாசுரங்களை 817 எனக் கொள்வதுடன் **(3)** சிறிய திருமடலில் 40 பாடல்களும் பெரியதிருமடலில் 78 பாடல்களும் இருப்பதாகக்கொண்டு, திவ்வியப் பிரபந்தத்தில் நாதமுனிகள் காலத்திற்குப்பின் சேர்க்கப்பெற்ற திருவரங்கத்தமுதனார் இயற்றிய இராமாநுச நூற்றந்தாதியில் அடங்கியுள்ள 108 பாடல்களையும் சேர்த்து மொத்தப் பாடல்களின் எண்ணிக்கையை 4000 எனக் கொள்ளல் ஆகியவற்றைக் காணமுடிகின்றது.

947 பாடல்கள் உள்ளதை முதலாயிரம் என்றும் 1134 பாடல்கள் உள்ளதை இரண்டாம் ஆயிரம் என்றும் சொல்லுவதுபோல 3776 பாடல்கள் அடங்கியதை நாலாயிரம் என்பதில் தவறில்லை; கலிவெண்பாவின் கண்ணிகளைப் பாசுரங்களாக எண்ணிக் கணக்கும் காட்டவேண்டிய அவசியமும் இல்லை என்று மயிலை மாதவதாசன் குறிப்பிடுகின்றார்.[14] நாதமுனிகளால் தொகுக்கப் பெற்ற ஆழ்வார்களின் அருளிச் செயல்களையே நாலாயிரத்திவ்வியப் பிரபந்தம் எனக் கொள்வது பெருவழக்காக உள்ளதால் இராமநுச நூற்றந்தாதியை நாலாயிரக் கணக்குக் காட்டுவதற்காகச் சேர்க்க வேண்டுவதுமில்லை எனில் தவறாகாது. (இசைப்பா இயற்பா நாலாயிரக் கணக்கு ஆகியவை பின்னிணைப்பு 11–ல் இடம்பெற்றுள்ளன)

## முதலாழ்வார்கள்

பொய்கையாழ்வார்; பூதத்தாழ்வார்; பேயாழ்வார் ஆகிய மூவரும் ஆழ்வார்கள் எல்லோருக்கும் முன்னே தோன்றியவர்கள் ஆவதாலும், பின்பு உண்டாகும் பிரபந்தங்களுக்கெல்லாம் இலக்கணமாம்படி முதன் முதலில் திருவந்தாதித் திவ்வியப் பிரபந்தங்களைத் திருவாய் மலர்ந்தருளியமையாலும் இம்மூவரும் முதல் ஆழ்வார்களெனப்பட்டனர்.[15] முதலாழ்வார் மூவருக்கும் வழங்கிய இயற்பெயர்கள் மறைந்து பொய்கை, பூதம், பேய் என்ற பெயர்கள் இவர்களுக்கு அக்கால மக்கள் வழங்கிய பெயர்களாகத் தோன்றுகின்றன. இப்பக்தி இயக்கத்தைத் தொடங்கியவர்கள் பிறர் கண்களுக்கு எவ்வாறு தென்பட்டனர் என்பதற்குச் சான்றாக இவர்களின் பெயர்களிலிருந்து ஒருவாறு தெரிந்து கொள்ள முடிகின்றது. வைணவபக்தி இயக்கத்திற்கு முன்னோடிகளான இவர்களது காலத்தை கி.பி. ஐந்தாம் நூற்றாண்டு என்பர்.[16] இயற்பாவிலடங்கிய இவர்களது பிரபந்தங்கள் முறையே முதல் திருவந்தாதி; இரண்டாம் திருவந்தாதி, மூன்றாம் திருவந்தாதிகளாகும். வெண்பா யாப்பின் அந்தாதித் தொடையமையப்பெற்று, ஒவ்வொரு

அந்தாதியும் தனித்தனியே நூறு பாடல்களைக்கொண்டு திகழ்கின்றன. பொய்கையாழ்வார் காஞ்சியிலும், பூதத்தாழ்வார் மல்லையிலும், பேயாழ்வார் திருமயிலையிலும் பிறந்தவர்கள்.

முதலாழ்வார்கள் மூவரும் திருக்கோவலூரிலுள்ள ஒரு மாளிகையின் இடைக்கழியில், மழை பெய்து கொண்டிருந்த ஓரிரவில், ஒன்றுகூடி நின்றனர்; ஒருவர் படுக்கவும் இருவர் இருக்கவும் மூவர் நிற்கவும் உள்ள அவ்விடத்தில் அவ்விருளில் புதியதொரு நெருக்கம் உண்டானதை ஒவ்வொருவரும் தனித்தனியே உணர்ந்தனர்; முன்பில்லாத நெருக்கம் ஏற்பட்டதால் பொய்கையார் வையம் தகளியாக, கடல் நீரை நெய்யாகக்கொண்டு சூரியனை விளக்காக ஏற்றினார்.[17] பூதத்தாழ்வார் அன்பாகிய தகளியில் ஆர்வத்தை நெய்யாகவும் இன்புருகு சிந்தையைத் திரியாகவும் கொண்டு, ஞானத்தீபத்தை ஏற்றினார்.[18] இவ்விரண்டு ஒளியாலும் பேயாழ்வார் திருக்கண்டார், பொன்மேனி கண்டார்.[19] என்பதனை வரலாற்றுச் செய்தியாகக் கூறுவர்.[20] செய்ய கதிரோனாம் விளக்கையும், சுடராழியாம் சுடர் விளக்கையும் ஏற்றினார் முதல்வர், ஞானச் சுடர்விளக்கேற்றினார் இரண்டாமவர்; அவ்விளக்குகளைக் கொண்டு திருமாலையும் திருமகளையும் கண்டார் மூன்றாமவர், என்பதனை புறத்தே, உலகனைத்திலுமாகக் கண்ட திருமால் தரிசனம் பொய்கையாருடையது; அகத்தே உயிரினிடமாகக் கண்ட தரிசனம் பூதத்தாருடையது; அர்ச்சாவதாரத்தில் கண்ட திருமால் தரிசனம் பேயாருடையது; இம்மூன்று நிலையிலும் பெற்ற தெய்வ அனுபவமே இவ்வாழ்வார் பாடல்களில் பலவாகப் பாடப்பெற்றுள்ளன எனல் வேண்டும் என்பர்.[21]

"நீயும் திருமகளும் நின்றாயால், காமர்பூங்கோவல் இடைக்கழியே பற்றி" [22] எனும் பாடற் பகுதியை இம்மூவருக்கும் திருக்கோவலூரியில் திருமால் காட்சியளித்தற்கு அகச் சான்றாகவும், மேலொரு பொருளாமிலா மெய்ப்பொருளை இவ்வாழ்வார்கள் கண்ட இறையனுபவமாகவும் கொள்ளலாம்.

## முதல் மூவரின் அருளிச் செயல்கள்

பக்தர்கள் விரும்பியமைக்கும் உருவமே இறைவன் உருவம்; அவர்கள் விரும்பியமைக்கும் பெயரே அவர் திருநாமம்; அன்பர்கள் ஆர்வத்துடன் அவனை எவ்வண்ணம் சிந்தித்தாலும் அவ்வண்ணமே அவன் காட்சியளிப்பான்.[23] எம்பெருமான் திருப்பாற் கடலில் இருக்கிறான்; திருவேங்கடமலையிலிருக்கிறான் என்பர்; ஆனால் அந்த உத்தமன் தன்னை நினைக்கின்றவர் உள்ளத்திலேயே இருக்கின்றான்; மனித உள்ளத்திற்குள் உயர்வு நிலையிலே நின்று அருள்புரிகிறான்; தியானிப்பவர் தகுதி எதுவாயினும் தியானித்த உடனே அருள்புரிகிறான்.[24] ஐம்புலனை அடக்கி, ஆய்ந்த மலர் கொண்டு ஆர்வத்துடன் வழிபடின், மாவலிபால் வண்கை நீர் ஏற்ற திருமாலைக் காணலாம்.[25] வாயில் நாக்குண்டு, ஓவாதுரைக்க நாமமோ, நாராயணா என்னும் நாமம் உண்டு; அத்திருநாமத்தைச் சொல்லி நற்கதி பெறலாம்.[26] மூரி நீர் வண்ணனே மூவருள் முதல்வர்.[27] திருமால் வலம்புரியும் நேமியும் கொண்டுள்ளான்; மார்பிலே திருமகளும் திருவுந்தியிலே நான்முகனும் உள்ளனர், புரமூன்றும் எரித்த சிவபிரான் வலப் பக்கத்துள்ளான்[28] வைகுண்டநாதன் பூமியில் வந்து அவதரிப்பவன்; திருவேங்கடமலையில் அர்ச்சாவதாரமாய் எழுந்தருளியிருப்பவன்; நான்கு வேதங்களிலும் நிற்பவன்; இவ்வாறு விண்ணையும் மண்ணையும் வியாபித்து நிற்பவனும் பாற்கடலில் பள்ளி கொண்டவனுமாகிய திருமாலின் பெருமையை எவராலும் அறியயிலாது.[29] கடற்சேற்றில் அழுந்தி மறைந்துபோய் நின்ற பூமியைத் திருமால் அந்த இடரை நீக்கற்குரிய அவதாரம் எடுத்து, வராகமூர்த்தியாகி, சேற்றிலிருந்து பூமியை நெம்பி எடுத்தவாறு, இருள் நிறைந்த தன் உடலிற் புகுந்து, உள்ளத்தை அறியாமைச் சேற்றிலிருந்து நெம்பி எடுத்து, ஞான விளக்கை ஏற்றினான்[30] திருமாலின் திருவடியை வழிபடுபவர்கள், அரிய வினைகள், மூப்பு ஆகியவை நீங்கப் பெற்ற ஞானபத்தியால் மனமாசு அகன்று மெய்ப்பொருள் காண்பர்[31]

பாவபுண்ணியங்களை ஆராய்ந்தறிந்து, இந்திரியங்களை வெளியே திரியவிடாது அடக்கி, தேர்ந்தெடுத்த மலர்கொண்டு எம்பெருமானின் திருநாமங்களைச் சொல்லி அருச்சித்துத் துதிப்பவர்கள் திருமாலின் திருவடிதரிசனத்தைப் பெறுபவர் [32] திருமாலை தியானிக்க உள்ளம் இருக்கிறது. அருச்சிக்கத் தாமரை மலர் இருக்கிறது; வேண்டிய பொழுதும் இருக்கிறது. அவன் திருவடியிற் கூடுவதற்கு வணங்கும்படியான தலையிருக்கிறது. வணங்கின் அருநரகம் சேரார், பாவங்கள் அகலுவது உறுதி,[33] புருடோத்தமனது திருநாமங்களைக்கொண்டு துதிக்கும் செயலே வேதப் பொருளின் சாரம்; வேதப் பொருள்களை அறியவல்லவர்களானால் அறிந்து கொள்ளுங்கள்; அறியும் வல்லமை அற்றவர்களானால் மாதவனின் திருநாமங்களை உச்சரிப்பதே வேதத்தின் சாரம் என்பதையாவது அறிந்து கொள்ளுங்கள் [34] ஆன்மாவோடு கூடிய நோயான பாவபுண்ணியங்கள் என்னும் இருவினைகளையும் நீக்குவதோடு, மறுபடியும் வந்து பற்றக் கூடிய வினை அணுகாமல் போக்கடிப்பது திருமால் தரிசனமே; இதனைக் கனவிற்பெறினும் சிறப்புகளையருளும்.[35]

திருமாலே வருநரகம் தீர்க்கும் மருந்து [36] திருமாலின் திருநாமங்களை ஓதியவுடன் கீர்த்தி, ஆற்றல், செல்வம், அழகு, களங்கமற்ற நற்குடிப்பிறப்பு, ஆகியவற்றுடன் மற்றுமுள்ள நன்மைகளைத்தும் தாமே தேடி வந்தடையும்; அவன் திருநாமங்களை ஓதி அவனருளைப் பெற்றால் அனைத்து நலன்களும் வேறு முயற்சியின்றித் தாமே வந்தடையும்[37] செங்கண்மாலின் திருவடிகளில் அடைக்கலமாதலே வாழும் வகை; இதுவே நல்வாழ்வுக்கு உபாயமாகிறது.[38] பாவங்களை நீக்கிக் கொள்வதற்குக் கடுமையான தவங்களைச் செய்து உடலை வருத்தவேண்டியதில்லை; எளிய முறையான பக்தி நெறியைப் பின்பற்றி திருமாலை வழிபட்டால் வினைகள் நீங்கிவிடும்; மெய்மலர்கள் தூவிக் கைதொழுதால்

தீவினைகள் சுருங்கி அகன்றோடிவிடும்.[39] நமது ஞானத்தைச் செலுத்தி அதன் பயனாக உணர்தற்கு அரியவன்; தூய சிந்தனை உடையவர்கள் அவனைத் தேடிப்போக வேண்டியதில்லை; அவனே அவர்கள் நெஞ்சம் புகுவான்; எனினும் உள்ளபடி அறிய முடியாதவன் [40] பொருள்களைக் கண்ணாற் பார்ப்பது போன்று பரம்பொருளான நெடுங்கண் மாயவனைக்காண இயலாது; பக்தி மேலிட்டு, உணர்வு நிலையிலே உள்ளம் உருகித் தோத்திரக்கவிகளை உகந்துபாடும்போது உண்டாகின்ற அந்தப் பேரானந்தமே இறையனுபவம்; நான்மறையின் உட்பொருளாக நிற்பதும், உள்ளத்தில் உணர்வு மயமாகக் கலந்திருப்பதும் இந்த அனுபவமே.[41] எனினும் அது நன்று இது தீது என்ற எத்தகைய ஐயமும் கொள்ளாமல் அதுவே சரண் என்று முடிவு செய்து கொண்டு எம்பெருமானின் திருவடிகளைத் தொழுதால் பல பிறவிகளிலும் ஈட்டிய வினைகளின் பாவங்கள் அனைத்தும் முற்றும் நசித்துப்போகும்.[42] திருமால் நிற்பதும், இருப்பதும், கிடப்பதுமாகப் பல சேத்திரங்களில் கோலம் காட்டுகின்றான்; இருள் நிறைந்த இதயத்தில் உணர்வு என்னும் விளக்கை ஏற்றி வைத்து எம்பெருமானை நாடினால் அவன் அந்த உள்ளத்தில் வந்து கோயில் கொள்வான். சிறிது காலம் நின்ற வண்ணமும் அதன்பின் அடியாரின் ஆர்வத்தைக் கண்டு பள்ளி கொள்ளக் கூடும்.[43] என்பன முதலாழ்வார்களின் பிரபந்தங்களிற் காணக்கிடக்கின்றன.

## *திருமாலும் சிவபிரானும்*

எருதுவாகனம், ஆகமநூல், உறைவிடம் மலை; அழித்தல் தொழில்; வேற்படை; செந்நிறம் ஆகியவற்றைக் கொண்டு அரன் என்ற திருப்பெயரையும்; கருட வாகனம் வேதநூல், உறைவிடம் திருப்பாற்கடல், காத்தல்தொழில், சக்கரப்படை, கார்மேக வண்ணம் என்னும் இவற்றுடன் நாரணன் என்னும் திருநாமம் கொண்டிருப்பினும் இருவருக்கும் மேனி ஒன்றுதான் [44] சடைமுடியோடு கூடிய சிவபிரானும்

உலகங்களையெல்லாம் ஈரடியால் தாவியளந்த நெடுமாலும் இருவேறு அங்கங்களைக் கொண்டு விரிவார்களேயானாலும் ஒருவன், ஒருவன் அங்கத்தில் என்றும் இருக்கிறான் [45] அழிப்புத்தொழிலுக்கு எரி நிறமும், அளிப்புக்குக் கார்மேகநிறமும் உள்ளமை தெளிவாகும். இடபவாகனத்தையுடைய சிவபெருமான் திரிபுரம் எரித்தவன், நீரணிந்த மேனியன்; உமையொருபங்கன்; சடை முடியன்; கருடவானத்தையுடைய திருமால் இரணியன் மார்பு கீண்டவன்; மணி வண்ணன், அலர்மேல் மங்கையுறை மார்பன் [46] திருமால் ஓர் உருவனல்லன்; அவன் உருவம் ஒளியுருவம்; இவ்வுலகத்தோர் ஈருருவன் – சிவபிரானுடன் இணைந்த திருக்கோலமே என்பர்.[47] தாழ்சடையும், நன்மழுவும் அரவணியும் உடைய சிவபிரானாகவும்; நீண்ட திருமுடியும், திருவாழிப் படையும் பொன் அரைஞாணும் தோன்றத் திகழும் திருமேனியுடைய திருமாலாகவும், இவ்விரண்டுருவும் தோன்றுமாறு திருவேங்கடத்தான் காட்சியளிக்கிறான்.[48] இவ்வாறு 'ஒன்று' என்னும் போது இருவருள் ஒருவர் என்ற கூறினும் இவ்விருவரும் ஒரவரே என்ற கொள்கையினை வற்புறுத்துவதாகச் தெரியவில்லை; திருமாலின் பரத்துவத்தைப் பாடுவதே இம்மூவரின் குறிக்கோள் என்பது புலனாகும்.

## திருமழிசையாழ்வார்

தொண்டை நாட்டில் திருமழிசை என்ற ஊரில் தோன்றிய இப்பெரியாருக்கு பக்திசாரர் என்ற பெயருமுண்டு. பார்க்கவருக்கு கனகாங்கியிடம் பிறந்த இவரைப் பெற்றோர்கள் பிரப்பம் புதரிலிட்டுப் போயினர்; பிரம்பு அறுக்கப்போன குறவன் ஒருவன் அக்குழந்தையை எடுத்துச் சென்று வளர்த்தான் என்பது இவ்வாழ்வாரைப்பற்றிய வரலாறாகத் தெரிகிறது. இளமையிலேயே பரஞானமுதிர்ச்சி பெற்று யோகியாக விளங்கினார்; உண்மைத் தத்துவம் இதுவென்று அறிய முயன்று பலமதங்களையும் ஆராய்ந்து இறுதியில் திருமாலே பரம்பொருள் எனத் தெளிந்து, அப்பரம் பொருளையே தியானித்துக் கொண்டு திருவல்லிக்கேணி முதலிய பலதலங்களில் யோகத்தில்

எழுந்தருளியிருந்தார். முடிவில் கும்பகோணத்தில் யோகத்தில் எழுந்தருளியிருந்த காலத்தில்தான் நான்முகன் திருவந்தாதி; திருச்சந்தவிருத்தம் எனும் இரு பிரபந்தங்களும், யோகத்தின் பயனாக வெளிவந்தன என்னும், இவ்வரலாறு திருமந்திரம் மூவாயிரம் அருளிய திருமூலர் வரலாற்றை நினைவுறுத்துவதாகவுள்ளது. நூற்று இருபது பாடல்களைக் கொண்ட திருச்சந்த விருத்தம் பெருமாள் திருமொழியையடுத்து முதலாயிரத்தில் இடம் பெற்றுள்ளது. ஆசிரியவிருத்தத்தால் அமையும் மற்ற பாசுரங்களிலும் இப்பிரபந்தப் பாசுரங்கள் இனிய ஓசை (சந்தம்) உடையதாயிருத்தல் கொண்டு இதனைச் சந்தவிருத்தம் எனக் கொண்டதாகக்கொள்ளலாம். இவரது மற்றொரு பிபந்தமாகிய நான்முகத்திருவந்தாதி [96], வெண்பாக்களைக் கொண்டது. முதல் ஆழ்வார்கள் பிரபந்தங்களையடுத்து மூன்றாவது ஆயிரத்தில் இடம் பெற்றுள்ளது. "அமலனாதிபிரான்; கண்ணிநுண் சிறுத்தாம்பு" என்பனபோல "நான்முகனை" எனத் தொடங்கப் பெற்று அந்தாதித் தொடையிலமைந்த இப்பிரபந்தம் நான்முகன் திருவந்தாதி எனப் பெயர் பெற்றதாகத் தெரிகிறது.

திருமழிசைப்பிரான் சீரிய வைணவராவதற்கு முன் பல்வேறு சமய உண்மைகளைக் கண்டறிந்தவர் என்றும், சித்தர்கள் வரிசையில் இடம் பெற்ற சிவவாக்கியரும் இவரும் ஒருவரே என்றும், பேயாழ்வார் இவரையாட்கொண்டு அருளியதால் வைணவரானார் என்ற செய்தியும் உண்டு. [49] சித்தர்களுள் ஒருவரான சிவாக்கியர் கி.பி.14–ஆம் நூற்றாண்டின் இறுதி 15–ஆம் நூற்றாண்டின் தொடக்கம், ஆகிய காலத்தில் வாழ்ந்தவர் என்பர் ஆராய்ச்சியாளர்.[50] திருச்சந்த விருத்தமும் சிவவாக்கியர் பாடலும் எழுசீர்ச்சந்த விருத்தங்களாக உள்ளன. இந்த ஒற்றுமையால் மதம்மாறிய சிவவாக்கியரே திருமழிசையாழ்வார்; இருவரும் ஒருவரே எனக்கொள்ள நேர்ந்திருக்கலாம். ஆனால் திருமழிசையாழ்வார்; சிவவாக்கியருக்கு முன்பல நூற்றாண்டுகளுக்குமுன் வாழ்ந்தவராதலின் இவ்விருவரும் ஒருவரே என்பது பொருந்தாக் கருத்தாகும்.

நாராயணன் நான்முகனைப் படைத்தான்; நான்முகன் சிவபெருமானைப் படைத்தான்,[51] நாராயணனே பரம்பொருள்; எவராலும் அறியமுடியாத பெருமையுடையவன்; வேதங்களால் ஆராயப்படும் பொருளும் அவனே; தவத்தோர்க்குப் பலனளிப்பது அவனது திருவருளே; தனக்கு ஒப்பாரின்றி வீறுபெற்றவனும் எல்லாப் பொருட்கும் சொல்லாகயிருக்கும் பரம்பொருளும் இவனே[53] இரணியன் மார்பைப் பிளந்தவனும் உலகையுண்டு வெளியிட்டவனுமாகிய திருமாலே தேவ, மனித, தாவர வகைகள் அனைத்திலும் அந்தராத்மாவாக உளன்[54] உண்மையை அறியமாட்டாத சமணர், அயர்ந்து போன பௌத்தர், சிறியராகிய சைவர் ஆகியோர் மாயவனே, மாலவனே, மாதவனே என வழிபடாமையால் ஈனராயினர்; திருமாலின் திருவடியைக் கழுவிய நீரைச் சிவபிரான் புனித நீரென்று தம்சடைக்கண் ஏற்றார்;[56] கண்ணபிரான் பகவத் கீதையின் முடிந்த முடிவு (சரமசுலோக) நிலை என் உள்ளத்தில் பதிந்துள்ளது. அதனால் கூற்றம், கொடுவினை முதலியன சாராவகையறிந்ததேன்[57] ஈசற்கும் நான்முகற்கும் தெய்வமான நாராயணன் அனைத்திற்கும் காரணன்; கற்றவையும், கற்பவையும், நற்கிரிசைகளும் அவனே.[58] தன்னிலே கிளர்ந்த பரவுகின்ற அலைகளையுடைய கடல் தனக்குள்ளே கிளர்ந்துலாவி மறுபடியும் அடங்கும் தன்மையைப்போல் பிரபஞ்சம் அனைத்தும் திருமாலிடத்திலே பிறந்து, அவனிடத்திலேயே லயமடைந்து, அவனிடத்திலேயே அடங்குகின்ற இத்தன்மைகள் அவனிடம்தான் உள்ளது.[59] உலகைப் படைத்தாய், அவ்வுலகை நின்வயிற்றினுள் ஒடுங்கவைத்தாய்; இவ்வுலகத்தினுள்ளே வந்து பிறந்தாய்; ஓரிடத்தை இருப்பிடமாகவும் கொண்டவனாகயில்லை; சரீரியான உன்னோடு உலகம் சரீரமாக ஒன்றி நிற்க, நீ விக்கிரகத்தோடு நின்றாய்; இத்தகையனான நின்னை எவராலும் அறியமுடியாது.[60] ஐம்புலன்களையடக்கி நல்ல புலத்தின் வழிகளைத் திறந்து, ஞானச்சுடரைக் கொளுவி என்பெலாம் நெக்குருக, உரோமம்

சிலிர்ப்பு உள்ளத்துள்ளே கனிந்து எழுந்ததோர் அன்பினாலேயே பரமாத்மாவைக் காணலாம்[61] இருபத்து நான்கு தத்துவங்களாகி ஏழு தீவுகள், மலைகள், கடல்கள் என்ற இவைகளாகி; பன்னிரு ஆதித்தர்களாகி நின்ற ஆதி தேவனாகிய எம்பெருமானை, உடல் உறுப்புக்கள் எட்டும் பூமியிற்படும்படி வணங்கி, எட்டெழுத்துக்களாய அவரது திருநாமத்தை ஓதுகின்றவர்கள் வானமாள வல்லவர்கள்.[62] அத்தனாகி, அன்னையாகி, நம்முள்புகுந்து, பல பிறப்புக்களை ஒழித்து நம்மை ஆட்கொள்வான்.[63] மறந்தும் புறந்தொழாத திருமாலடியார்களை வணங்கிச் செல்லுமாறு யமன் தன்னுடைய தூதுவர்களுக்கு இரகசிய ஆணையிட்டுள்ளான்.[64]

முதலாழ்வாரின் பாசுரங்கள் இறைவனுடன் கலந்து வாழத்துடிக்கும் ஏளிய உள்ளங்களின் ஏக்கத்தையும், சமயப் பொறையையும் காட்டுகின்றன எனக் கொள்ளத் தடையில்லை. ஆனால் அவர்கள் காலத்தவராகக் கருதப்படும் திருமழிசையாழ்வாரின் பாடல்களில் திருமாலே பரம்பொருள், அவனையன்றிப் பிறிதொன்றும் இல்லை எனக்கொண்டு ஒருகடவுட் கொள்கையின் உள்ள உறுதியை உணர்த்துவதுடன் பிறசமயக் கண்டனங்களையும் காணமுடிகின்றது. "குலங்களாயி ஈரிரண்டில் ஒன்றினும் பிறந்திலேன்"[65] என்பதால் பிறப்பின் காரணமாகக் கொள்ளப்படும் வருண, சாதிக்கோட்பாடுகளையும், அதனையே உயர்வு தாழ்வுகளுக்கு அடிப்படையாகக் கொள்ளும் முறையைப் பின்பற்றியவரல்லர் இவர் என்பதும் புலனாகும்.

## நம்மாழ்வார்

சீராரும் வேதம் தமிழ் செய்த மெய்யன் வேதம் புகர்ந்திட்டமெய்ப் பொருளின் உட்பொருளை ஓதும் சடகோபன் என்றும் போற்றப்படும் நம்மாழ்வார், பாண்டியநாட்டில் நெல்லை மாவட்டத்திலுள்ள ஆழ்வார் திருநகரி என வழங்கும் திருக்குருகூரில் காரியர் என்பவருக்கு உடைய நங்கையிடம் தோன்றியவர்; தாய்

தந்தையரிட்ட பெயர் மாறன் என்பது; பிறந்த நாள் தொட்டுக் குழந்தை பாலுண்ணுதல் முதலிய இயல்பு ஒன்றுமின்றி இருந்ததால் ஆவ்வூரில் எழுந்தருளியுள்ள" பொலிந்து நின்ற பிரானின்திரு முன்பு பெற்றோர்கள் அக்குழந்தையை விட்டனர்; அங்கிருந்த புளியமரத்தடியில் சென்று பதினாறு ஆண்டுகள் இறைவனை நினைந்து அமர்ந்திருந்தார்; வடநாட்டினின்றும் திரும்பி வந்த மதுரகவியாரின் வினாக்களுக்கு விடையளித்து அவருக்கு மூன்று தத்துவங்களையும் உபதேசித்து, இவ்வுலகில் (35) முப்பந்தைந்து ஆண்டு எழுந்தருளியிருந்து, அந்தமில் பேரின்ப வீடாகிய பரமபதத்தை அடைந்தார் என இவரது வரலாற்றுச் செய்திகளாக அறியக்கிடைக்கின்றன. பிறக்கும் பொழுது குழந்தைகளைக் கவரும் சடம் என்ற வாயுவைச் சினந்து தடுத்ததுபற்றி இவர் சடகோபர் எனப் பெயர் பெற்றார் என்பர்.[66] தலைமையும் பெருமையும் உடையவரானாதால் நம்மாழ்வார் எனப் பெயர் இவருக்குச் சிறப்பாக உரியதாயிற்று என்றும், ஆழ்வார்கள் அனைவரினும் சிறந்தவரான இவரை அவயவியாகவும் பிற ஆழ்வார்களை இவருக்கு அவயங்களாகவும் வைணவப் பெருமக்கள் கொள்வர்.

## இவரது அருளிச் செயல்கள் வருமாறு

அ) அகத்துறை அமையப் பெற்று, கட்டளைக் கலித்துறையாலாகிய நூறு பாடல்களைக் கொண்டு அந்தாதிப்–பிரபந்தமாத்திகழும் திருவிருத்தம்.

ஆ) ஒன்பது முதல் பதினாறு அடிவரையுள்ள ஆசிரியப்பாக்கள் ஏழினைக்கொண்ட திருவாசிரியம்;

இ) எண்பத்தேழு வெண்பாக்களாலான அந்தாதிப் பிரபந்தமாகத்திகழும் பெரியதிருவந்தாதி ஆகிய மூன்றும் இயற்பாத் தொகுதியுள் முறையே 5; 6; 7–வது பிரபந்தங்களாகத் திகழ்கின்றன.

ஈ) 1102 பாசுரங்களைக் கொண்ட திருவாய்மொழி, நாலாயிரத்தில் இறுதி ஆயிரமாகத்திகழ்கின்றது. திருவாய் மொழியிலும் 27 பதிகங்கள் அகத்துறையிலைமையப் பெற்றுள்ளன. ருக், யசுர்; அதர்வனம் எனும் வடமொழி வேதங்களின் சாரப்பொருளை முறையே திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி என்ற மூன்று பிரபந்தங்களின் மூலமாகவும் வேதங்களுள் சிறந்ததும், பகவானது சுவருபமாகவே உள்ளதுமான சாமவேதத்தின் தத்துவப்பொருளை, சரமபிரபந்தமான திருவாய் மொழியாய் அருளிச் செய்து 'அவற்றை மதுரகவிகளுக்கு உபதேசித்தருளினார் என்பர்.[67]

வாய்மொழி என்பதற்கு வேதம் எனப் பொருள் கொள்ளப்படுவதால் திருவாய்மொழி என்பதற்குச் சிறந்த வேதம் எனப்பொருள்கொள்ளலாம். "மிக்க வேதியர் வேதத்தினுட் பொருள் நிற்கப்பாடி என் நெஞ்சுள் நிறுத்தினான்" [68] என்று மதுரகவியாழ்வாரும் குறிப்பிடுகின்றார். சடகோபர் எம் பெருமானைக் கண்டு களித்த ஆர்வமிகுதியால் தோன்றிய பாசுரங்களாதலின்; தமக்கு அளிப்பது போலவே மற்றைய அடியார்களுக்கும் இன்பம் அளிக்கும் என்றும் தன் வினைகளும் அடியோடு ஒழிந்தன [69] என்று குறிப்பிடுதலிலிருந்து இந்நூற் சிறப்பும் புலனாகும். என் உயிரில் ஒன்றுபட்டு நின்று, என் சொல்லால் யான்பாடிய இனியகவிகள் இவை, என்று உலகம் எண்ணும்படி செய்து, மாயன் தன் சொல்லால் தன் புகழ்களைத் தானே பாடினான்; [70] என்னால் தன்னை இன்றமிழ்பாடிய ஈசன் [71] என்னுள் தானாக்கி என்னால் தன்னை வங்கவி பாடும் வைகுந்தநாதன் [72] திருமாலே மாயக்கவியாய் வந்து தன்நெஞ்சினும் உயிரினும் கலந்து தன்னைப் பாடுவித்துக் கொண்டான் [73] என்பன கொண்டு பிரபந்தங்களைத் திருமாலே தன்னுள் இருந்து பாடினார் என்பது நம்மாழ்வாரின் திருவுள்ளம் எனத் தெரியவருகின்றது.

திருவிருத்தம் அகத்துறை அமையப் பெற்ற அந்தாதிப் பிரபந்தம். அகத்துறை இலக்கியம் என்னும் வெளிப்படைப் பொருள்;

டள்ளுறைப் பொருள் (அந்நியாபதேசம்) ஸ்வாபதேசம் சீவான்மா–
ரமான்மாவின் தொடர்பினை விளக்குவது என்பர்.[74] அகப்பொருள்
ரபு தமிழின் கண் அமைந்துள்ள பழைய தொருமரபாகும். ஆயின்
அவ்வகப் பொருளையும் அதன் துறைகளையும் அருளியல்துறை
அனுபவங்களோடு பாடும் அடியவரின் வெவ்வேறு மனநிலைகளைக்
காட்டும் தன்மையைக் காண முடிகின்றது. ஆதலின் தமிழ்மொழியின்
கண் வழங்கிவந்த அகப்பொருட் பண்பினை அருளியல்துறையிலும்
ாடுவதாகக் கொள்ளலாம். அகப்பொருள் துறையிலமைந்திருப்பினும்
ரம்பொருளை அடைய வழி காட்டும் ஒளியாகவே அமைந்துள்ளது.
இறைவனைத் தலைவனாகவும், ஆன்மாவைத் தலைவியாகவும்
ற்பித்துப் பாடும் நாயகன் நாயகி பாவம் (Bridal mysticism) என்பதால்,
இதனைப் பேரின்ப நிலைபற்றியதாகவே கொள்ளலாம். நம்மாழ்வார்
இமையோர் தலைவா; மெய்ந்நின்று கேட்டருளாய் அடியேன்
சய்விண்ணப்பமே"[75] என்பதால் இறைவனுக்குத்தான் வேண்டுவதை
ிண்ணப்பிக்கின்றார். மேலும் "மாறன் விண்ணப்பம் செய்த
சால்வார் தொடையலிந்நூறும்"[76] என்னும் இவரது வாக்கே இதனை
றுதிப்படுத்துவதாக உள்ளது. இவ்விண்ணப்பமும் பிறவியிலிருந்து
டுபடத்துடிக்கும் இன்பம் என்பதை "பொய்நின்ற ஞானமும் பொய்யா
ழுக்கமும் அழுக்குடம்பையும் இனியும் அடையாமற்
கட்டருளவேண்டும்"[77] என்பது தெளிவுறுகின்றது. பத்தி யோகத்தை
மற்கொள்வோர் திருமாலின் அணிகலன்கள், திருநாமங்கள்,
ருமேனியமைப்பு ஆகியவைகளை அறிந்து பேசினும், அப்பேச்சிலும்
ந்த யோகங்களிலும் எம்பிரான் தொடர்பு கொண்டுள்ளான்; உயர்
ானத்தின் சுடர் விளக்காக இருக்கின்றான்; எனினும் எம்பிரானின்
பருமைகளிற் சிறிதும் எண்ணுவதற்கு முயன்றாரில்லை.[78] உறங்காது,
ண்ணாது, இறையனுபவத்திலேயுள்ள யோகிகட்கும் எரி, நீர், காற்று,
ன், வான் ஆகிய அனைத்துமாக உள்ள திருமால், அவர் எண்ணமாய்
ரிரும் இயல்பினன்.[79] பாற்கடலுள் படவரவணையில் அறிதுயிலமர்ந்த
நமாலைச் சிவன், அயன், இந்திரன் முதலிய தெய்வக் குழாங்கள்

கைதொழுது ஏத்துகின்றன.[80] மூவுலகங்களையும் உண்டாக்கிய மூலகாரணான திருமாலின் திருவடிகளை ஊழி தோறும் வாழி என்று யாம் தொழவாய்க்குமோ; [81] கடல் வண்ணத்தையுடைய செந்தாமரைக் கண்ணனாகிய திருமாலே விட்டுப் பிரியக் கூடாத மாகதி; வெம்நரகில் சேராது காத்தற்கும் அவனே கதியாதலின் இடையறாது அவனையே தியானிக்கவேண்டும்.[82] உலகினையுண்டு; பிறகு அதை உமிழ்ந்து, வராக அவதார மெடுத்து அதனை வெளிக் கொணர்ந்து, திரி–விக்கிரமனாகி அதனைத்தம் திருவடிகளால் அளந்த திருமால்தான் இப்பூமியை உண்டாக்கினான் என்பர்; அவனே அனைத்து உலகாகவும் உளன்; அத்தகைய நாராயணனே புகலிடம்; திருமாலைத் தவிர மற்ற தெய்வங்களிடத்து மேற்சொன்னவைகள் பொருந்தா.[83] என்பன போன்றவற்றை இவர்தம் முதல் மூன்று பிரபந்தகளிற்காண முடிகின்றது.

பக்தி வளர்ந்து முற்றி உள்ளத்திற்குத் தெளிவையும் உறுதியையும், காற்றில்லாத இடத்தில் அசையாமல் எரியும் சுடரைப்போல் அசையாமையும், உறுதி வந்த பின் உண்டாகும் பூரண உணர்வே ஞானம் என்பது–வைணவத்தின் அடிப்படையாதலின், பக்தியின்றி மெய்ஞ்ஞானம் இல்லையென்பது புலனாகும். இதனை "மயர்வறலும், அமரர்களின் அதிபதியுமான திருமாலின் திருவடிகளைத் தொழுதால், சரணடைந்தால், அனைத்துத் துயர்களும் நீங்கும் [84] வான், நெருப்பு, நீர், நிலம், காற்று ஆகிய இவ்வைந்தினையும் அடிப்படையாகக் கொண்டு பரந்து விரிந்துள்ள பொருள்களில் எல்லாம் தானேயாகி, அவ்வப் பொருள்கள் தோறும் உடலுக்குள் உயிர் மறைந்து நிற்பது போல, ஈசன் நிற்கின்றான்; இந்தப் பரந்த பொருள்களையெல்லாம் தனக்குள் அடக்கிக் கொண்டு அவையில்லாமல் செய்கிறான்; அந்த ஈசனைத்தான் வேதம் பேசுகிறது.[85] உடலைத் தாங்குவதும், நடத்துவதும், அனுபவிப்பதும், அதனுள் நிற்கும் உயிரைப்போல இறைவன் எல்லாப்பொருள்களுக்கும் எல்லா உயிர்களுக்கும் தாங்குபவனாகவும், நடத்துகின்றவனாகவும் அனுபவிக்கின்ற–வனாகவும் உளன்;

பொருள்களிடத்தில் வைத்திருக்கும் ஆசைகளை முற்றிலும் பற்றிவிட்டு, உயிரை எம்பெருமானுக்கு அர்ப்பணித்துவிட வேண்டும்[86] றை நீக்கியறுத்துவிட்டால், உயிரானது வீடு அடைந்து விட்டது எனக் காள்ளலாம்; ஆனால் பற்று அறவே நீங்க வேண்டுமானால் றைப்பற்றைப் பற்றிக் கொள்ளவேண்டும்[87] நாராயணனுடைய ருவடிகளைப் பற்று; பற்றினால் எண்பெருக்கு நலமும் ஒண்பொருளும் ல்லையற்ற அளவில் உண்டு[88] என்பது எல்லாத் தருமங்களையும் ட்டுவிட்டு கவலையின்றி என்னைச் சரணடை, நான் உன் வங்களைப் போக்கி முக்தி தருவேன். [89] எனும் பகவத் கீதையின் டிவான உபதேச (சரமசுலோக) கருத்தைப் பிரதிபலிப்பதாக உள்ளது. வர் மகள் விரும்பும் பெறற்கரிய திருமால், தன்பால் தியுடையவர்களுக்கு, அவர்கள் விரும்பும் வண்ணம் எளியவனாவன், னையோர் அணுகவும் முடியாத தன்மையன்; வெண்ணெய்யைத் ருடியதால், யசோதை உரலினோடு சேர்த்து மார்பிடத்துக் கயிற்றால் டக்கட்டுப்பட்டு, அவ்வுரலோடும் சேர்ந்திருந்து வருந்திய எளிமைத் ன்மையையுடையவன்.[90] அவரவர்கள் தத்தம் கருத்திலமைத்துக் காண்ட பலவித நெறிகளில் பல மூர்த்திகளையும் வழிபடலாம் அந்தந்த ர்த்தியும் ஒரு குறையுமின்றிப் பொருந்தும்; அவரவர் பூசனைக் குரிய னும் அடைவர்.[91] நம்முடைய பற்றுக்களை ஒழிக்கவும், வினைகளின் தொடர்பை அறுத்து விடுபடுவதற்கும், அவன்பால் திகொள்ளற்கும் அவனே அருள்புரிதல் வேண்டும்; நம்முயற்சி மட்டும் ாதாது; எல்லா உயிர்களுக்கும் உயிராக இருக்கும் (அந்தராத்மாவான) றைவனின் அருள்வேண்டும் [92] கண்ணனைப் பக்தியுடன் வழிபட்டு வனைச் சரணடைந்தால், அவனே நமக்கு அனைத்துச் ல்வங்களுமாவான் அனைத்து நோய்களைத்தீர்க்கும் மருந்துமாவன்; வனை அடைதற்கு விடாது தடுக்கும் தடைகளுக்கெல்லாம் அவனே ருந்துமாவன்; தீவினைகளைச் செய்யச் தூண்டும் ஐம்புலன்கள், மைக் கெடுத்து நாசம் செய்யாமல் அவனே தடுப்பான் [93] நான் என்னும் பாருளும் தானேயாகி, எல்லா உலகும் உயிரும் தானேயாகி, உலகு–

உயிர் ஆகிய அனைத்துமாகவும் உளன்; [94] கண்ணன் திருவடிகளை நண்ணும் பக்தர்களுக்கு நாராயணன் என்னும் நாமமே திருமந்திரம்; அத்திருநாமமாகிய மந்திரத்தைத் தியானித்தலே போதும் வேறெதுவும் வேண்டாம்; [95] கார்மேக வண்ணனும், செந்தாமரைக் கண்ணனும் ஐம்பூதங்களுமாகவுள்ள நேமிப் படையோனும், வானவர்கள் பக்திப் பரவசத்தால் போற்றி வணங்கப்பெறும் தாமோதரரினின் தாள்களே தவநெறிக்குத் துணையாகும்.[96]

பிறப்பில்லாத் தனி முதலாக இருப்பவன் மனிதராகவும் மற்றுமுள்ள மீன், ஆமை முதலியவைகளாகவும், ஓயாது பிறக்கிறான்; ஆனால் வினை காரணமாகப் பிறத்தல் இல்லாதவன்; மக்களின் பிறவிப் பெருங்கடலைப் போக்குற்குக் கருணைக்கடல் பாற்கடலிற் கிடக்கிறது என்று கூறும் வண்ணம் பள்ளி கொண்டு இருக்கிறான்; கனி, கரும்பின் இன்சாறு, வெல்லக்கட்டி, தேன், அமுதம் ஆகியவை போன்ற எம்பெருமானை மகிழ்ச்சியுடன் துதித்துக் கூத்தாடும் பக்தர்களே முழுதும் உணரும் தன்மையர்; அனைத்தையும் அறியக் கூடியவர்கள் என மதிக்கத் தக்கவர்கள் [97] யோகநெறியை மேற்கொண்டு இறைவனோடு ஆன்மா ஒன்றுபடுமாறு துணிந்து செய்யவல்லவர்கள்; தவிர மற்றவர்கள் எல்லாரும் அவனை நெஞ்சிலே நினைத்துப் பரவசத்தால் எழுந்து ஆடி அலற்றுவது தான் காரியம்; காரணம் பக்தர்கள் எம்பெருமானுடைய அனுபவத்தைப் பெற்று அவனுடைய கலியான குணங்களுக்கு உள்ளத்தைத் திறை கொடுத்திருப்பவர்கள் [98] போன்றவற்றை "அவாவற்று வீடு பெற்ற குருகூர்ச் சடகோபன் சென்றனவற்றால்" [99] அறியமுடிகிறது.

## மதுரகவியாழ்வார்

திருக்குருகூருக்கு அண்மையிலுள்ள திருக்கோளூரில் அந்தணர் குலத்தில் நம்மாழ்வாருக்குச் சில ஆண்டுகளுக்கு முன்னரே அவதரித்தவர்; செவிக்கினிய செஞ்சொற்கவிகளைப் பாட

வல்லவராதலின் மதுரகவிகள் எனும் பெயர் பெற்றவர்; தென்னாட்டிலும் வடபுலத்திலுமுள்ள திருமால் திருப்பதிகள் பலவும் சேவிக்கப்பெற்று இறுதியில் திருக்குருகூரில் நம்மாழ்வரை வந்தடைந்து அவரையே தம் ஞான குருவாகக் கொண்டவர்; சடகோபரும் இவரை அடிமை கொண்டு மூவகைத் தத்துவங்களினியல்பையும், மற்றும் யோக ரகசிய உண்மைகளையும் உணர்த்தினார்; இவரும் குருகூர் நம்பி பாவின் இன்னிசை பாடிக்கொண்டு, தேவும் மற்றறியாது சில காலம் வாழ்ந்து திருநாடெய்தியவர் என்பது இவரது வரலாறாகத் தெரியவருகிறது.

நம்மாழ்வாரையே துதிப் பொருளாகக் கொண்டு பதினொரு பாசுரங்களைக் கொண்ட "கண்ணி நுண் சிறுத்தாம்பு" என்னும் பிரபந்தத்தையருளினார். அது முதலாயிரத்தில் "அமலனாதிபிரானை" யடுத்து இடம் பெற்றுள்ளது. இவர் இறைவனைப் பாடாது நம்மாழ்வார் ஒருவரையே நோக்கிப் பாடினார். இது இறைவனைப் பற்றியது அன்று எனினும், "வாய்த்த திருமந்திரத்தின் மத்திமமாம்பதம் போல், சீர்த்த மதுரகவி செயல்கலையை ஆர்த்த புகழ் ஆரியர்கள் தாங்கள் அருளிச் செயல் நடுவே, சேர்வித்தார் தாற்பரிய்ந்த தேர்ந்து" [100] என்பதனை இப்பிரபந்தம் இறைவன் மீது பாடப் பெற்ற ஏனைய ஆழ்வார்களின் அருளிச் செயல்களை ஒன்றாகக் கொண்டமைக்கு உரிய காரணமாக, மனவாள மாமுனிகள் குறிப்பிடுகின்றார்.

யசோதைப் பிராட்டி சிறிய துண்டுக் கயிற்றினால் கட்டத் தன்னை ஆக்கிக் கொண்ட பெரிய மாயனான கண்ணபிரானின் திருப்பெயரைச் சொல்லுவதைக் காட்டிலும் பரிபூரணரான நம்மாழ்வாரின் திருநாமத்தைச் சொன்னால், தித்திக்கிறது; நாக்கில் அமுதூறுகிறது [101] நம்மாழ்வாரையன்றித் தேவும் மற்றறியாது, அவர்தம் பொன்னடியை மேவி, அவரது அருளிச் செயல்களைப் பாடித்திரிவேன்;[102] என்று குறிப்பிடுகின்றார். மாறன் அருளிச் செயல்களைப் பாடுவதனை அவர் பாற்கொண்ட பத்தியால் மட்டுமன்றித் திருமாலின் திருவருள் பேற்றிற்கு இட்டுச் செல்லும் என்ற

உறுதிப்பாடும் ஒர காரணமாகயிருக்கலாம். நம்மாழ்வாரின் இ பாடல்களைப் பாடித் திரிந்தமையால் கண்ணபிரான் தரிச கிடைத்தது; இது நம்மாழ்வாருக்கு அடிமையான, தான் பெற்ற நன்ம தனது பண்டை வினைகளை எல்லாம் நீக்கித் தன் ஆட்கொண்டவர்;[104] வேதத்தின் உள்ளுறைப்பொருளை நிலைநி பாடித் தன் உள்ளத்தில் நிறுத்தினான்[105] என்றவாறு நம்மாழ்வா பற்றிக் குறிப்பிடுகின்றார்; இதனால் நம்மாழ்வாரின் அருள். அ அருளிச் செயல்களின் வழியாக மதுரகவியாரை உய்வித்தது என் மெய்யடியாரான ஞானகுருவிடம் கொண்ட பக்தி இறை தரிசனத்தைப் பெற உதவும் என்பதும் தெரியவருகிறது.

## *குலசேகராழ்வார்*

குடிகளின் நன்மை கருதி ஆளக் கட்டுப்பாட பன்னிரண்டு ஆண்டுக்கொருமுறை, சேர நாட்டு மக்கள் கருதியவ அந்நாட்டை ஆளுவதற்குத் தேர்ந்தெடுத்த அரசர்களுச் "பெருமாள்கள்" என்ற சிறப்புப் பெயர் வழங்கியது. அத்தகையே இருபந்தைந்து பெருமாள்கள் சேரநாட்டை ஆண்டனர்; அவர்கள குலசேகரர் என்ற பெயர் உடையவங்கள் இருவர் உள்ளன அவ்விருவருள் ஒருவரே குலசேகராழ்வார் என்பது சேரநாட்டைப் பற் வழங்கி வரும் கதையைக் கூறும் கேரளோத்பத்தி, என்னும் நூலா அறியமுடிகின்றது.[106] இவர் திருவஞ்சைக் களத்தில் பிறந்தவர்; கேர நாடு முழுவதும் ஆண்டபேரரசர்; திருமாலிடம் முழுதும் ஈடுபட்டவ சேர அரசு உச்ச நிலையிலிருந்த காலத்திலும் அந்நாட்ை ஆண்டதனால் மனநிறைவு அடையாது சீரங்கம் சென்று அரங்க நாத வழிபாட்டில் முனைந்து, உலகியல் வாழ்வு முற்றிலும் துறந்தபின்தா அவர் மனநிறைவு பெற்றார் எனத் தெரியவருகிறது. குலசேகர பெருமாள் பாடிய 105 பாசுரங்களைக் கொண்ட பிரபந்தம் பெருமா திருமொழி என்னும் பெயருடன் முதலாயிரத்தில், நாச்சியா

திருமொழியை அடுத்து இடம் பெற்றுள்ளது. இவரது காலத்தை, கி.பி. எட்டாம் நூற்றாண்டின் பிற் பகுதி என்று பேராசிரியர் தெ.போ. மீனாட்சி சுந்தரனார் அவர்கள் குறிப்பிடுகின்றார்கள்.[107] திருவரங்கப் பெருநகருள் பள்ளிகொண்ட பெருமானைக் கண்டு களிக்கும் நாள் எந்நாளோ? [108] கண்ணாரக்கண்ட பின் வாயார என்று கொலே வாழ்த்தும் நாள்? [109] அடியவரோடு உடன் சென்று அவன் அழகினைக் கண்டு பெருமாளின் திருவடியினை மலர் தூவி அணுகும் நாள் எந்நாளோ[110] அரவணையிற் பள்ளி கொள்ளும் தலைவனைக் கண்டவுடன் நாத்தழும் பேறப் புகழ்வது என்று கொலோ?[111] மலர்ச் சென்னியை அவரடியில் தாழ்த்தி வணங்குவது எந்நாளோ [112] ஒளிமதி சேர் திருமுகம் கண்டுகொண்டே நின்று கல்லான மனமும் நீராய் உருகும் நாள் எந்நாளோ[113] என்பனவற்றால் இவ்வாழ்வார் திருவரங்கத்திற்குச் சென்று அப்பெருமானைக் கண்டு வழிபடும் நாள் எந்நாளோ என்று ஏங்கிய நிலை, சைவ மெய்யடியாரான திருநாளைப் போவாரை நினைவுபடுத்துவதாக உள்ளது.

இவ்வாழ்வார் அரங்கன் அடிஇணை தங்கும் பெரும் பித்தன் ஆதலின் வையகந் தன்னோடும் கூடுவதில்லை [114] தீதில் நல்நெறிநிற்க அல்லாதவற்றைச் செய்வதை நீதியாக உடைவரொடும் கூடுவதில்லை[115] இதற்குக் காரணம் திருமாலடியார்களல்லாதவரோடு கூடுகின்ற மனநிலையைச் செங்கண் மாலேதவிர்த்து விட்டான்;[116] என்றும் குறிப்பிடுகின்றார். உடற்பிறவி; வானாளும் செல்வம்; மண்ணரசு; உருப்பசி மேனகையன்வைர்தம் பாடவொடு ஆடல்; மன்னவர்தம் கோனாகிக்கொண்டாடும் செல்வம் ஆகியவைகள் அனைத்தையும் வேண்டாது ஒதுக்கியவர்; [119] வடவேங்கடத்தான் சேவடிகளைக் காண்பதையே பெருவிருப்பாகக் கொண்டவர் [118] என்பனவற்றை அறியமுடிகின்றது.

பழிபாவம் விளங்கும் வஞ்சனையை நீக்கி நல்வழிவராத இந்திரியங்களையடக்கி, பழவினைகளைவேரறுத்து, ஐம்பொழுதும்



இறைவனை வழிபட்டு, அறம்திகழும் மனத்தவர்கள் [119] தூர்க்க முடியாத பேரவா நிறைந்த மனமுடைய தொண்டர் குழாம் [120] திருமாலை வாழ்த்தி மால்கொள் சிந்தையர்; ஆடி, வாய்விட்டுக் கூப்பிட்டு அயர்வு எய்தும் தொண்டர்கள்; [121] பாவிகளெல்லாம் பிழைக்க ஒழுக்கத்தாலும் உபதேசங்களாலும் தீதில் நன்னெறியைக் காட்டி எங்கும் திரியும் திருமாலடியார் என்று, தனிக்கோலொச்சிய பேரரசர், எல்லாம் பெற்றுப்பெருவாழ்வு வாழ்ந்தவர்; அவையனைத்தையும் துறந்து அடியார்க்கு அடியனாகி அவர் பால் பக்தி கொண்டவர் என்பதும், இதனால் இறைவனடியாரிடத்து அன்பு கொண்டொழுக வேண்டும் என்று வற்புறுத்திய பெருந்தகை என்றும் இவரைக் கொள்ளலாம்.

ஈன்றதாய் மிக்க சினத்தால் தன் குழந்தையை வெறுத்துத் தள்ளினும் தாயின் அருள்நினைந்தே அழும் அக்குழந்தையைப் போல் நீயே தந்த துன்பங்களைக் களையாவிட்டாலும் உன்னையன்றிப் புகலில்லை.[123] பிறர் இகழ்வனவற்றைத் தன் கணவர் செய்யினும் அவனையன்றி வேறு ஒருவனை நினைக்கவுமாட்டாத உயர்குலக் கற்புடைய மனைவியைப் போல், நீ அடிமைகொண்டு ஆளாது விடினும் உன் திருவடிகளையே சரணமாகக் குறிக்கொள்வேன்.[124] தார் வேந்தனின் கோல் நோக்கி வாழும் குடிபோல் அடியேன்பால் அருள் நோக்கம் செய்யாதிருப்பினும் உன் பற்று அல்லாமல் வேறு பற்று இல்லை[125] என்பன இறைவனது திருவருள் நோக்கியிருக்கும் நிலையினைப் புலப்படுத்துவதாகக் கொள்ளலாம். மேலும் "மருத்துவனும்–நோயாளியும், எங்கும் போய்க் கரைகாணாது எறிகடல் வாய் மீண்டேயும் வங்கத்தின் கூம்பேறும் மாப்பறவை, செங்கமலம் வெங்கதிரோற்கே அலரும் தன்மை; வான் மறந்த காலத்தும் பயிர்கள் கார்மேகத்தையே பார்த்திருத்தல், ஆறுகளெல்லாம் பரவி ஓடி ஆழ்கடலையே சென்று சேரல் [126] ஆகிய உவமைகளையும் குறிப்பிடுகின்றார்; இவற்றால் நீங்காத துயர் தரினும் உனதருளே பார்த்திருப்பேன்; உனது திருவடிகளையே சரணடைவேன்; வெந்துயர்

வீட்டானிடினும் உந்தன் அந்தமில் சீர்க்கு அல்லால் அகம் குழையமாட்டேன்; மெய்த்துயர் வீட்டாவிடினும் என் சித்தம் உன் பாலே வைப்பேன், என் நெஞ்சினுள்ளே புகுந்து விளங்குகிற உனது கலியாண குணங்களிலே ஆழ்ந்து கிடப்பேன்; என்றாவது திருமாலைச் சரணடைந்து அவனருளிற்கே ஏங்கும் நிலையைக் குறிக்கின்றார் என்பது புலனாகும். இறைவன் தரிசனத்தை எப்பொழுது பெறப்போகின்றோம்; அடியார்களுடன் என்று அணுகப்போகின்றோம் என்று எண்ணி ஏங்கிய இவ்வாழ்வார் உலக ஈடுபாடுகளை ஒழித்து இறைவனிடம் பித்துக் கொண்ட நிலையினராகத் திகழ்ந்தவர் எனத் தெரிகிறது. திருவேங்கடமென்னும் பொன்மலையில் ஏதேனும் ஆவேனோ [127] என இனிப்பிறவி இருப்பின் அப்பிறவியிலும் திருமால் திருப்பதியில் ஏதாகிலும் ஒன்றாய் இருப்பதை இவருள்ள விரும்புவதையும், இறைவனின் அருட்செயலில் ஒன்றி நின்று தம்மை மறந்து பாடியவர் என்பதனையும் அறிய முடிகின்றது.

## *பெரியாழ்வார்*

வில்லிப்புத்தூரில் அந்தணர் வருணத்தில்வேயர் குடியிற் பிறந்த இவரது இயற்பெயர் விஷ்ணு சித்தன் என்பதாகும்; நந்தவனம் உண்டாக்கி, திருமாலைகட்டி, திருமாலுக்கு மலர்த்தொண்டு புரிந்தும், "உடுத்துக்களைந்த அவன் பீதக ஆடை உடுத்துக் கலந்துண்டு, தொடுத்ததுழாய் மலர் சூடிக்களைந்தன சூடும் தொண்டராய்" [128] உண்ணா நாள் பசியாவதொன்றுமில்லை, ஓவாதே நமோ நாராயணாவென்று எண்ணாநாளும், இருக்கு, யசுர், சாம வேத நாள் மலர்க்கொண்டு பாதம் நண்ணாநாள் அவை தத்துறுமாகில் அன்று பட்டினி நாள் [129] என்ற கொள்கையினராக வாழ்ந்தவர்; பாண்டியன் அவைக் களத்திலே திருமாலே பரம்பொருள் என்று அறுதியிட்டு, அவன் நிறுவிய பொற்கிழியைப் பெற்றவர்; ஆதலின் பட்டர்பிரான் என்ற பெயரைப் பெற்றவர். [130] மங்களா சாசனத்தில் மற்றுள்ள ஆழ்வார்கள் தங்கள் ஆர்வத்தளவே கொண்டனர்; இவர் சோராத

காதற்பெருஞ்சுழிப்பால் தொல்லை மாலை ஒன்றும் பாராது அவரைப் பல்லாண்டு காப்பிடும் பான்மையர் ஆதலின் பெரியாழ்வார் எனும் பெயர் பெற்றார் [131] கண்ணன் அவதாரத்தில் உள்ளத்தைப் பறிகொடுத்து அவனது எழில், எளிவந்த தன்மை ஆகியவற்றில் மிக்க ஈடுபாடு கொண்டு, அதனாலுண்டான எல்லையற்ற மகிழ்ச்சியினால் பெரியாழ்வார் திருமொழியை அருளிச் செய்தார் என்று தெரியவருகிறது.

இவரது அருளிச் செயல்களான பதினொரு பாடல்களைக் கொண்ட திருப்பல்லாண்டும்; 461 பாசுரங்களைக் கொண்ட பெரியாழ்வார் திருமொழியும் முதலாயிரத்தில் முதன்மை பெற்றுத் திகழ்கின்றன. நாடும் நகரமும் நன்கு அறியுமாறு எட்டெழுத்து மந்திரத்தைப் பாடும் மனம் உள்ளவர்கள் எல்லோரும் திருமாலை வாழ்த்திப் பல்லாண்டு பாடவேண்டுகின்றார்.[131] எம்பெருமானும் அடியார்களும் பிரிவின்றி என்றும் வாழவேண்டும், இறைவனோடு அருள்வடிவாய் இதயகமலத்தில் வீற்றிருக்கும் அன்னையாகிய திருமகளையும் வாழ்த்துகின்றர்.[132] தொண்டர் குலத்தைச் சேர்ந்தவர்கள் திருமாலின் ஆயிரம் திருநாமங்களைச் சொல்லி அவன் திருவடியைத் தொழுது, தமது பிறப்பினால் வந்த பழைய குலத்தை விடுத்துப் பல்லாண்டு பாடுக.[133] என்பதால் திருமாலடியார்கள் அனைவரும், பிறப்பின் காரணமாகக் கொள்ளப் பெறும் சாதி, குலம் ஆகியவை நீங்கப்பெற்று; ஒரே குலமாகி இறைத்தொண்டு புரிதல் வேண்டும் என்பதை அறிய முடிகின்றது.

தொட்டிலிற்கிடத்திய கண்ணபிரானாகிய குழந்தை, தொட்டில் கிழிய உதைப்பதுடன் கையில் எடுத்து அணைத்துக் கொண்டால் வயிற்றிலும் உதைக்கிறான். இதனால் உடல் மெலிந்து, குழந்தையை எடுக்கும் வலியற்றுவிட்டது[134] என்பதில் தாய்மை உணர்வைக் காணமுடிகின்றது. அழுகின்ற மாயக் குழந்தைக்குத் தாய் யசோதை அம்புலிகாட்டி, அதனைத் தவழந்து வரும் கண்ணனைப்

பார்க்குமாறு கூறல்,[135] செங்கீரைப் பருவத்தில் கண்ணனாகிய குழந்தையை அசைந்தாடச் சொல்லல், [136] சப்பாணிப் பருவத்தில் கைகொட்டி விளையாடச் சொல்லல், [137] தளர் நடைப் பருவத்தில் கண்ணன் தளர்நடையிட்டுவரும் அழகு தாயுள்ளத்தை இன்பத்தில் ஆர்த்தல்[138] கண்ணனை அச்சோ வருக வருக என யசோதை அழைத்தல்[139] போன்றவை பிற்காலத்தில் எழுந்த பிள்ளைத் தமிழ் இலக்கிய வகைக்கு வழிகாட்டியாக அமைந்தன எனத் தோன்றுகிறது.

பாண்டவர்களுக்குத் தூதுவனாகச் சென்று பாரதப் போரை அணிவகுத்தும், கொடிய நஞ்சையுமிழும் காளிய நாகம் இருந்த மடுவிலே புகுந்து அனைவரும் அஞ்சுமாறு அப்பாம்புப் படத்திற்குதித்து, அப்பாம்புக்கும் அருள்செய்தவன்;[150] என்பதில் கண்ணபிரானது ஆற்றலையும் அருளையும் ஆழ்வார் அனுபவித்த நிலையைக் காணமுடிகின்றது. திருப்பாற்கடலிற் பள்ளி கொள்ளுதலை விடுத்துத் தன் இதயத்தில் வந்து குடிபுகுந்தான்; பெரிய பிராட்டியின் கணவரானதிருமால் ஆதித்தியமண்டலம், பாற்கடல் பரமபதம் ஆகிய தான் வசிக்கும் இடங்களை விடுத்து அடியேனை உரித்தாக்கினான்[141] பிராணம், அபாநம், வியாநம், உதானம், சமலனம் என்ற ஐந்து பிராணன்களும் உடலைவிட்டு நீங்கித் தலை சாயும்முன் பாற்கடலிற் பள்ளி கொண்ட, மாயனைச் சரணடைந்தால் நற்கருமம் எதையும் சாதிக்கலாம். [142] சிவபிரானும் நான்முகனும் முறைப்படி துதித்து ஏத்தும் திருமாலே உருக்குமணிப் பிராட்டியை வலிந்து தம் தேர் மீது ஏற்றிக் கொண்டு, எதிர்த்தோர் சேனை நடுவே நின்று போரிட்டு வென்றவன்.[143] கண்ணன் ஒரு காலத்தில், ஒரு குலத்தில், ஓரிடத்தில் வாழ்ந்தவனல்லன்; மூவருள் ஒருவனும் அல்லன்; குழந்தையாகக் கண்ட கண்ணபிரானே பரம்பொருள் என இவ்வாறு இவ்வாழ்வார் தெளிவுறுத்துவதாகக் கொள்ளலாம்.

மீனமாகி, ஆமையாகி, நரசிம்மமாகி, வாமனனாகி, பின் பரசுராமன். தசரதராமன்; பலராமன் ஆகிய மூன்று உருவின்

இராமனாகி, கண்ணபிரானாகிக் கற்கி ஆகியும், இவ்வாறு அவதாரங்கள் எடுத்துப் பகைவர்களை ஒழிக்கும் எம்பெருமான்[14] அடியார்களைக் காப்பதில் வல்லமையுடையவன்; அவனை அடைவது சோர்பு (சாவு) வரும்காலத்தில் துணையாவன் என்று எண்ணத்தால்தான்; தகுதியற்றவன் என்னும், கசேந்திரனுக்கு அருள்புரிந்தவன் ஆதலின், தமக்கும் அவ்வாறே அருள் பாலிப்பான் என்ற நம்பிக்கையில் சரணடைந்ததாகக் குறிப்பிடுகின்றார். மேலும் மரணகாலத்தில் ஏற்படும் இளைப்பு மேலிட்டுத் தான் வருந்தும் போது எம்பெருமானை நினைக்க முடியாமற் போதலும் கூடும், ஆதலால் நல்ல அறிவோடு கூடிய இந்தச் சமயத்திலேயே சொல்லி வைத்ததாக திருவரங்கத்தில் அரவணைப் பள்ளியமர்ந்தோனிடம் விண்ணப்பிக்கின்றார்[145] மரணகாலம் வருவதற்கு முன்னரே மனத்தையே கோயிலாக்கி அதில் மாதவனை நிலையாக எழுந்தருளச் செய்து, அன்பாகிய மலரை அவன் திருவடியில் சாத்தவல்லார் யமதூதர்களால் வரக்கூடிய துன்பங்களிலிருந்தும் தப்பிப் பிழைக்கலாம்.[146] இதனால் இறைவனை இடையறாது தியானிப்பவர்களுக்கு மரண பயமில்லை எனத் தெரிகிறது. கண்ணபிரானது குழலோசையால் உயிரினங்களும், தாவரங்களும் தம் நிலையிழந்த தன்மையை இவர் குறிப்பிடுகிறார்; கோகுலபாலன்; பசுக்களுக்கும், கோபியர்களுக்கும் உயிர்த்தோழன் (கோபாலன்) வேணுகானத்தால் அனைத்தையும் தம் நிலை மறக்கச் செய்யும் வேணுகோபாலன் எனும் இம்மூன்று கோபாலர்களிலும் இவ்வாழ்வார் கொண்ட ஈடுபாட்டை இவரது பாடல்கள் வாயிலாகக் காண முடிகின்றது.

## ஆண்டாள்

சிவனடியார் வரிசையிற் சிறப்புற்றுத் திகழும் காரைக்காலம்மையாரைப் போன்று வைணவ ஆழ்வார்களின் வரிசையில் விளங்கும் ஆண்டாள் சரிதையும் தெய்வத்தன்மை

வாய்ந்ததாகத் தெரிகிறது. பாண்டிய நாட்டில் சீவில்லிபுத்தூர் நந்தவனத்தில், துளசிவனத்திடையே பெரியாழ்வாரால் இவர் கண்டெடுத்து வளர்க்கப்பெற்ற மகள்; ஆதலின் ஆழ்வார் திருமகளார் என்றும், இவர் சூடிக்கொடுத்த மாலையினை இறைவனுக்கு அணிவித்து வந்ததால் சூடிக்கொடுத்த சுடர்க்கொடியார், என்றும் பிரபந்தங்கள் வழியாக உலகமக்களை உய்வித்து அடிமைகொண்டவராகக் கருதப்படுவதால் ஆண்டாள் என்ற பெயரும் பெற்றவர்; இளமையிலேயே எல்லாக்கலைகளும் நிரம்பப் பெற்று, திருமாலிடத்துக் கொண்ட தெய்வக் காதலால், மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழ கில்லாத வைரக்கியத்துடன் திகழ்ந்தார்; பெருப்பெருத்த கண்ணாலங்கள் செய்து பேணி நம்மில்லத்துள்ளே இருத்துவான் எண்ணி நாமிருக்க இவளும் ஒன்று எண்ணுகின்றாள்[247] என்பதனைப் பெரியாழ்வார் உணர்ந்து, இறைவனது நியமனப்படி ஆண்டாளை மனக்கோலத்துடன் திருவரங்கப்பெருநகர்க்கு அழைத்துச் சென்று அழகிய மணவாளன் முன் நிறுத்த, கோதையரும் அவ்விறைவன் திருமேனியிற்கலந்தார் எனும் இவரது வரலாற்றுச் செய்திகளால் பெரியாழ்வாரின் திருமகளான ஆண்டாள் அக்காலத்தில் அடிமை பூண்டொழுகிய பெண்பாலரில் மிகச் சிறந்தவர்; திருவரங்கப் பெருமானுடன் இரண்டறக் கலந்துவிட்டார்; திருவரங்கப்பெருமானும் அருள்புரிந்து ஆட்கொண்டார் என்று கருதலாம். இவர் அருளிய முப்பது பாடல்களைக் கொண்ட திருப்பாவையும் நூற்று நாற்பத்து மூன்று பாசுரங்களடங்கிய நாச்சியார் திருமொழி ஆகிய இரண்டும், முதலாயிரத்தில் பெரியாழ்வார் திருமொழியை அடுத்துமுறையே 4; 5–வது பிரபந்தங்களாகத் திகழ்கின்றன. இவரது காலத்தைப் பெரியாழ்வார் காலமாகக் கருதப்படும் கி.பி.8–ஆம் நூற்றாண்டென்பர்.[148]

பாவை நோன்பு என்பது கன்னிப் பெண்களால் மார்கழி மாதத்தில் தொடங்கப் பெற்று அம்மாதத்துப் பௌர்ணமியோடு முடிக்கப் பெறும் ஒரு விரதமாகும்; நல்ல நாயகரை அடையவும், நாடு செழிக்கவும்

கார்த்தியாயினி தேவியை நோக்கிக் கன்னிப் பெண்களால் இந்நோன்பு அம்மாதத்தே நடத்தப் பெறுவது என்பதும் சங்க நாளிலே "தைநீராடல்" என வழங்கி வந்தது; மலையாள நாட்டில் திருவாதிரைத் திருவிழா என்றும் சைவரால் ஆருத்திராதரிசனம் என்றும் கொண்டாடப்படும் திருநாள் இவ்விரத முடிவு தினமே என்பர்.[149] சீவில்லிபுத்தூரையே ஆயர்பாடியாக்கி, அவ்வூரில் வசிக்கும் பெண்களை ஆய்ச்சியர்களாக்கி, வடபெரும் கோயிலுடையானையே கண்ணனாக்கி, தன் ஆற்றாமையைத் தணித்துக்கொள்ள நினைத்த ஆண்டாளால் மார்கழி நோன்பு நோற்கப்பட்டது; தோழியர்களை எழுப்பி நீராடி, வடபெருங்கோயிலுடையானை வணங்கி நோன்பு நோற்றவர்; இவ்வாறு வணங்கிய வகையில் ஓதப்பெற்றவையே திருப்பாவைப் பாசுரங்களாயின என்பது மரபுச் செய்தியாகும். திருமாலைக் கணவராகப் பெறக்குரிய மனவுறுதிபெற்ற ஆண்டாள், உடற்கட்டவிழப் பெற்று, மணமயமாகி, இறைவனை இப்பொழுதே சேரவேண்டும் என்று எழுந்த காதற்பெருக்கால் வழிந்த பாசுரங்களே திருப்பாவையும் நாச்சியார் திருமொழியும் எனிற் பொருந்தும். கண்ணபிரானைத் தூயோமாய் வந்து, மலர் தூவித் தொழுது, வாயினால்பாடி, மனத்தினால் தியானித்தால் நாம் முன்பு செய்த பாவங்களும், நம்மையறியாமல் இனிவருகிற பாவங்களும் நீங்கும்;[150] திருப்பாற் கடலில் அறிதுயில் கொண்ட ஆதிமூலத்தை யோகியர்களும் ஞானயிர்களும் தம் உள்ளத்தே வைத்துத் தியானித்து, அசையாமலமர்த்தி, மெள்ள எழுந்து அவனது திருநாமத்தை ஓதுகின்றனர்.[151] அனைத்துலகங்களையும் தம் திருவடிகளால் அளந்த புருடோத்தமனின் திருப்புகழை இசைபாடி, பாவை நோன்பிற்கெனக்கொண்டு நீராட்டத்தை நடத்தினால், நாடெல்லாம் தீங்கின்றி வாழ மாதம் மும்மாரி பெய்து, செழிப்பும், நீங்காத செல்வமும் பெருகும்;[152] ஆண்டாள் மழையை வேண்டிப்பாடுவதில் மழையின் பல்வேறு நிலைகளையும் ஆண்டவனோடு ஒன்றாக்கிப் பாடுகின்ற சிறப்பே,[153] ஆண்டவன் அருளே, மழை என்ற கருத்தை விளக்குகிறது எனலாம்.

பண்டைக்காலத்துத் தமிழர் வழிபாடெல்லாம் சமுதாயத்தின் நலங்கருதிய வழிபாடாகும் என்பதனைக் கன்னிப் பெண்களது பாவை நோன்பானாலும் நாடு முழுவதும் வாழ மழை பெய்யவேண்டும் என்பதாகவே முடிவதால் அறிய முடிகிறது. வழிபாடு தவிரப் பிறவற்றில் செல்லும் அவாவினை எல்லாம் அறுத்தெரியவேண்டும், என்ற வேண்டுகோளே உண்டு. இதனாலேயே பாவை நோன்பு நோற்கும்பாவைகள் வேண்டுவதும் பேரின்பம் என்பதும்; அவனையன்றிவேறு ஒருவரையும் வணங்காத நிலையை எல்லாப் பிறப்பினும் வேண்டிக் கொள்வதே என்பதும் புலனாகும்.

கண்கள் நீண்டகாலமாகவே இமை கொட்டவில்லை; துன்பக் கடலில் அமிழ்ந்து, அதைக்கடப்பதற்கு வைகுந்த நாதனாகிய தோணியைப் பெறாது தடுமாறுகின்ற தன்நிலையைக் குறிப்பிட்டு, பிரிவுத் துயரால் வருந்தும் காதலி, கருடக்கொடியையுடைய புண்ணியனை வருமாறு கூவியழைக்கக் குயிலிடம் வேண்டுகிறாள்.[154] இம்மைக்கும் ஏழேழ் பிறவிக்கும் துணையாகி, உடையவனாகிய நாராயணன் தமது திருக்கைகளால் இப்பெருமாட்டியின் காலைப்பிடித்து அம்மி மிதிக்க வைப்பதாக ஒரு கனவு கண்டாள்.[155] தாமரை போன்ற கண்களாகிற நெடுங்கயிற்றில் தன்னை அகப்படுத்தி இழுத்துக்கொண்டு விளையாடும் ஈசனாகிய கண்ணன், பிருந்தாவனத்தில் யானைக் கன்றுபோல் வியர்த்து விளையாடுவதைக் கண்டோமோ[156] என்பன போன்ற கருத்துக்களைக் காணமுடிகின்றது.

ஆண்டாளைக் குறித்து வழங்கும் கதைகளும், அவள் பாடிய பாடல்களும் அவளது பக்தியின் உயர்நிலையான பாவனைக்கு உயிர் ஊட்டுகின்றன. பாவனா சக்தியே ஆண்டாளின் பக்தியைத் தெய்வக் காதலாக்கி வளர்த்து இவளது ஆசைகளையெல்லாம் எம்பெருமானை நோக்கிச் செலுத்தியது. அக்காதலனுக்காக உள்ளத்தையும் உடலையும் ஒருங்கே தூய்மையாக வைத்துக் கொள்ளச் செய்தது; அந்த இலட்சியத் தலைவனுக்காக, எவ்விதத்தியாகமும் செய்ய முனைந்து நிற்கச்

செய்தது எனக் கொள்ளலாம். ஆண்பாலடியார் தன் ஆன்மாவைத் தலைவியாகக் கற்பித்து இறைவனாகிய தலைவனையடைய முயன்ற பாங்கினை இறைவட்டத்தில் அகத்துறையமையப் பெற்ற பாடல்களிற் காண முடிகின்றது. ஆனால் பெண்பாலரான ஆண்டாள் தன் ஆன்மாவை மட்டுமன்றி உள்ளம்; உணர்வு, உடல் ஆகியவைகளை அனைத்தையும் பாவனையின் மூலம் ஏற்பட்ட தெய்வக் காதலுக்கே அர்ப்பணித்ததை அறிய முடிகின்றது.

## *தொண்டரடிப் பொடியாழ்வார்*

சோழநாட்டில் திருமண்டலங்குடி என்னும் ஊரில் அந்தணர் குலத்திற் பிறந்த இவரது இயற்பெயர் விப்பிர நாராயணர் என்பதாகும்; இப்பெரியார் திரு நந்தவனக் கைங்கரியத்தை மேற்கொண்டு திருவரங்கத்தில் வாழ்ந்தவர்; தேவதேவி என்ற விலை–மகளொருத்தியின் வயப்பட்டு, அவளது மோகவலையில் சிக்கிமயங்கிக் கிடந்தவர்; திருவரங்கப் பெருமானின் திருவருளால் அம்மயக்கம் தெளிந்து, அவளைவிட்டு உய்வு பெற்றார் என்பதும், திருமாலடியார்களின் அடிப்பொடியாக கால்தூசியாக–தன்னைக் கருதும் கருத்தால் இவர் தொண்டரடிப்பொடி எனப் பெயர் பெற்றார் எனத் தெரியவருகிறது. இவர் அருளிய நாற்பத்தைந்து பாடல்களைக் கொண்ட திருமாலை; பத்துப்பாடல்களைக் கொண்ட திருப்பள்ளியெழுச்சி ஆகிய இரண்டும் முதலாயிரத்துள் திருச்சதத்தை அடுத்துள்ளன.

மரகதமலையொத்த திருமேனி; பவளவாய்; செந்தாமரைக்கண்கள் ஆகியவற்றைக் கொண்ட திருமாலே! அமரர் ஏறே! ஆயர்தம் கொழுந்தே! என்று இவ்வாறு சொல்லுவதில் பெறப்படும். இன்பத்தை விடுத்து இந்திரலோகத்தையாளும் இன்பம் பெறினும் வேண்டேன்[157] என்பதால், இறைவன் புகழைப்பேசும் இன்பமே இன்பம்; அதற்குச் சமமாக இந்திரலோகத்தையாளும் இன்பத்தையும் கூற

முடியாது என்பது இவரது கருத்தகத் தெரிகிறது. மூவுலகையும் உண்டு உமிழ்ந்த முதல்வனான, அரங்கமாநகரில் எழுந்தருளியுள்ள, திருமாலின் திருநாமத்தைக் கற்றதனால், ஐம்புலங்களையும் பட்டிமேயவிடாது அடக்கிக் கலியை உதரித் தள்ளி, யமன் முதலானோர் தலையில் அடியிட்டுத் திரிகின்றோம் [158] என்பதால் மரணபயம், நோய், கவலை முதலியவற்றையெல்லாம் மிதித்துத் தள்ளி வெற்றி முடிக்கும் காரணம் திருமாலின் திருநாமத்தைக் கற்றுக் கொண்டதனாலே என்பதாயிற்று. மனிதர்கள் வேதநூல்களிற் கூறியவாறு நூறு ஆண்டுகள் வாழினும், அக்காலத்தில் அரைநூற்றாண்டு உறக்கத்திலும், எஞ்சியதில் பதினைந்து ஆண்டுகள் பேதையாகவும் குழந்தையாகவும் கழியும், எஞ்சியுள்ள முப்பந்தைந்து ஆண்டுகளில் சிற்றின்பப் பற்று; பிணி, பசி, மூப்பு, துன்பம் ஆகியவைகளுக்குரிமையாகிவிடும்; இத்தகைய நிலையில் உள்ள மனிதப் பிறவியே வேண்டாம். [159] கற்றினம் மேய்த்த எம்பெருமான் மறையின் உட்பொருளாக உள்ளான்; சரணடையக் கூடிய தெய்வம் அவனைத் தவிரப் பிறிதில்லை; ஆதலின் அவன் திருவடிகளைச் சரணடையுங்கள் [160] குற்றமற்றவர்களாலன்றி மற்றவர்களால் அறிய முடியாதவனும், அவர்தம் உள்ளத்தே உறைகின்றவனும்மாகிய திருமாலை வணங்குதல் ஒன்றையே மேற்கொள்ளவேண்டும், அவனது பெருமைகளைச் சொல்ல இயலாது [161] பழுதிலாது நான் மறைகளை ஓதின அந்தணர்களே! இழிகுலத்திற் பிறந்தவர்களாயினும் அவர்கள் திருமாலடியார்களாயிருப்பின் அவர்களைத் தொழுது வழிபடுங்கள்; கொண்மிண், கொடுமின் என்று உபதேசித்து அவ்வடியார்களையும் தனக்கு ஒப்பாகவழிபட அருள்வான் [162] நான்கு வேதங்களையும் ஆறு அங்கங்களையும் ஓதியுணர்ந்து முதன்மை பெற்று விளங்கும் அந்தணர்களாயினும் திருமாலடியார்களைப் பழிப்பின் நொடிப் பொழுதில் அவ்வந்தணர்கள் புலையராவர். [163] என்பன கொண்டு இவ்வாழ்வார் தம் உள்ளுணர்வை அறியமுடிகின்றது.

தொழுது தொண்டு செய்யவேண்டும், சாதிச் செருக்கு, கல்விச் செருக்கு முதலியவைகள் கூடாது; சாதி கருதித் தொண்டர்களைப் பழிப்பவர் புலையராவார். திருமாலடியார்களுக்குப் பணிசெய்து, அவ்வடியார் உள்ளத்தில் திகழும் இறைவனை வணங்குவதாகும். மாசற்றார் உள்ளத்தைக் கோயிலாக இறைவன் கொள்கிறான்; எக்குலத்திற் பிறந்தவராயினும் மாசற்ற, மனத்தூய்மை உள்ளவர்களே மேலோர் என்பதனையும், அடியார்க்குச் செய்யும் பணி இறைவனையடைதற்குரிய நெறியாகும் என்ற உண்மைகளையும் இவரது அருளிச் செயல்களிற்காண முடிகின்றது. சாதி, குல, வருணங்கள் தலை நிமிர்ந்து தன்னாட்சி புரிந்த காலத்தில் வாழ்ந்த இவ்வடியார், சமயத்துறையில் இருந்துகொண்டு சமுதாயப் புரட்சியாளராகத் திகழந்தார் எனின் தவறாகாது. துயில் நீங்கி அருள்பாலிக்க வேண்டிய இறைவனைப் பாடுவதாக அமைந்தது இவரது திருப்பள்ளியெழுச்சிப் பிரபந்தம்.

## *திருப்பாணாழ்வார்*

சோழநாட்டிலுள்ள உறையூரில் பாணர் குடியில் பிறந்தவர் இவரது இயற்பெயர் பாணர்; தாழ்குலத்தில் தோன்றியதால், திருவரங்கப் பெரிய கோயிலை மிதித்தற்கு அஞ்சி, காவிரியின் கரையிலேயே நின்று கொண்டு, திருவரங்கப் பெருமானுள்ள திசையை நோக்கி, அப்பெருமான் மீது, செவிக்கினிய செஞ்சொற்கவிகளை யாழிலமைத்து, பக்திப் பரவசத்தோடு மெய்மறந்து நாள்தோறும் பாடிவந்தமையால் "பாண்பெருமாள்" என்று அழைக்கப்பெற்றார்; இவரை ஆட்கொள்ளக் கருதிய எம்பெருமான், உலோக சங்கர முனிவரிடம் தனக்கு அந்தரங்கமான பாண்பெருமானை நெகிழ நினையாது, தோளில் சுமந்து கொண்டு தம் பக்கல் அழைத்து வருமாறு நியமிக்க, அவரும் அவ்வாறே செய்தார்; பாண் பெருமாளும் இறைவனது திருமேனியழகை அடி முதல் முடி வரை யனுபவித்து, தாம் அனுபவித்தபடியே "அமலனாதிபிரான்" எனத் தொடங்கும்

பத்துப்பாசுரங்கள் கொண்ட பிரபந்தத்தைப் பாடியருளினார். அரங்கநாதனும் அங்கீகரித்ருள, ஆழ்வாரும் அனைவரும் காண, அணியரங்கன் அடியிணைகளில் இரண்டறக் கலந்தார் என இவரது வரலாறு கூறும்.

தாழ்ந்த குலத்தில் தோன்றிப் புகழ்பெற்ற திருப்பாணாழ்வார் வரலாறு சிவனடியார்களுள் ஒருவரும், தாழ்ந்த குலத்தில் பிறந்தவருமான நந்தனாரின் வரலாற்றை நினைவூட்டுவதாக உள்ளது. ஆழ்வாரது கனிந்த பக்தியைக்கண்டு அரங்க நாதப் பெருமாள், இவரைத் தம் தோள் மீது வைத்துத் திருக்கோவினுள் எடுத்து வருமாறு உலோக சங்சுர முன்வருக்குக் கட்டளையிட்டார் என்பதும், ஆலயத்தினுள்ளே ஆழ்வார், அரங்கனோடு இரண்டறக் கலந்துவிட்டார் என்பதும் மெய்யடியார் பால் இறைவனது கருணை வெள்ளம் எவ்வாறெல்லாம் பாய்ந்து ஆட்கொள்கின்றது என்பதை அறிவிப்பதாகக் கொள்ளலாம்; இவர் அருளிய பிரபந்தம், முதல் ஆயிரத்தின் இறுதியில், கண்ணி நுண் சிறுத்தாம்புக்கு முன்னர் இடம் பெற்றுத் திகழ்கின்றது.

நீண்மதின் அரங்கத்தம்மான், ஈனர்தம் தொடர்பால் எத்தகைய தீங்குமின்றி, தூய்மையாகத் திகழ்கின்றவன் ஆதலின் அமலன்; தன்னையாட்படுத்திச் சீரிய பொருளாக்கி தன் திருமேனிப் பேரொளியைக் காணப் பெற வைத்ததால் விமலன்; எளியார்க்கு எளியனாம் தன்மையால் நிமலன்; அடியவர்தம் குற்றங்களையும் சிறப்பாகவே கொண்டு ஏற்பதால் நின்மலன், என்று குறிப்பிடுகின்றார்.[164] தாங்கற்கரிய, நெடுங்காலம் செய்த தீவினைகளைக் களைந்து, அவற்றிற்கு உறைவிடமான தன்னை அவன் பால் பக்தி உண்டாகுமாறு வைத்ததுடன் தன் மனதிற்குள்ளும் புகுந்தான்; இதற்குக் காரணமாக அரிய பெரிய தவங்களைச் செய்தவன் என்பதும் தமக்குத் தெரியாது. பிராட்டியும் முத்துமாலையும் உடைய எம்பெருமானின் திருமார்புதான் தன்னை ஆட்கொண்டது[165] என்கிறார். கோவிலினுள் சென்று இறைவன் திருமேனியைக் கண்டு

தரிசிக்கவும் முடியாத குலத்திற்பிறந்தவராயினும், மாசற்ற மனத்துடன் அவனைத் தொழுது சரணடைந்தால் அவ்வடியார் தம் உள்ளத்தையே கோவிலாகக் கொள்கிறான்; ஆட்கொண்டு அருள்பாளிக்கின்றான் என்பதை இவ்வாழ்வார் தம் வரலாறு, அருளிச் செயல் வழியாக அறிய முடிகிறது.

## *திருமங்கையாழ்வார்*

மாறன் பணித்த தமிழ்மறைக்கு ஆறங்கம் கூற அவதரித்தவர் என்று போற்றப்படும் திருமங்கையாழ்வார், திருமாலடியார்களை ஆராதரிப்பதில் தமது செல்வமனைத்தையும் செலவழித்தார், பின் ஆராதனைக்குப் பொருள்யில்லாததால் களவுத் தொழிலே மேற்கொண்டவர்; அத்தொழிலில் மூண்டு நிற்கும் காலத்தில் ஒருநாள் மணமகன் ஒருவனை வழிமறித்து, அவன் அணிகலன்களைக் சூறையாடுமிடத்து, அவனால் இவர் செவியில் ஓதியமந்திரத்தினால் இவரது வாழ்க்கையில் திருப்பம் ஒன்று நிகழ்ந்தது; ஆறலைக் கள்வர் ஆண்டவன் மெய்யடியாரானார்; கள்வர், பேராற்றல் மிக்க தமிழ்க்கவிஞர் ஆனார், திருமால் கோவில்களுக்குச் சென்று ஆங்கு எழுந்தருளியுள்ள எம்பெருமானைப் புகழ்ந்து பாடல் தொண்டு செய்தார்; வாட்போரில் பகைவர் உடல் துணிக்கும் வன்மையும், பெரியவள்ளன்மையும், பொய்மொழி ஒன்றில்லாத மெய்ம்மொழித்திறம் போன்ற பல்வேறு சிறப்புக்களை உடையவர்; பெரிய திருமொழி திருக்குறுந்தாண்டகம், திரு நெடுந்தாண்டகம், திருவெழுக்-கூற்றிருக்கை; பெரிய திருமடல் சிறிய திருமடல்; என்னும் பனுவல்களை இயற்றியவர். தமிழ்ப் பெரும் புலமையும் கவிபாடும் ஆற்றலும் நிரம்பப் பெற்றவர்; ஆதலின் இவரது வாழ்க்கை வரலாறு; அருளிச் செயல்கள் ஆகியவற்றை தனி ஆய்வுக்கு கொண்டுள்ளோம்.

# அடிக்குறிப்பு

## இயல்-2 சாத்திரமும் தோத்திரமும் -வைணவம்

## 2-1 ஆழ்வார்களும் நாலாயிரத்திவ்வியப் பிரபந்தமும்

1. பக்தி இலக்கியம்; பக்.97–98
2. களைக்களஞ்சியம்: தொகுதி–1; பக்: 454–5
3. History of Indian Philosophy; Vol.III; p-63
4. தென்னிந்திய வரலாறு: பாகம் 1: பக்.150
5. ஸ்ரீநிவாசபிள்ளை; கே.எஸ். தமிழ் வரலாறு–பிற்பாகம் (முற்பகுதி) பக்.19
6. அரிசமய தீபம்: பா–2 (உரை)
7. History of Indian Philosophy; Vol.III; p-63-64
8. திருமாலை–42, 2–3
9. ஷை 43
10. திருவாய்: 3. 7 : 9
11. திவ்வியப்பிரபந்த ஸாரம்; பக்:47
12. அரிசமய தீபம்; (நாதமுனிச்சருக்கம்) பக். 12–19
13. அன்னங்கராசாரியர் பி.பி; பூர்வாசாரியர் வைபவம்; பக்.3–4
14. மயிலை மாதவதானன்; நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்; (பதிப்புரை) பக். ங–ச
15. உபதேசரத்தினமாலை 7
16. Ramanujam, B.V; History of Vaishnavism in South India upto Ramanja ; p.p.174-175.
17. முத. திருவந். பா–1
18. இரண். திருவந். பா–1
19. மூன்று திருவந். பா–1
20. நரசிம்மன் வை.மு; ஆழ்வார்கள் சரித்திரம்; பட்டர் வைபவம்; பிள்ளை லோகாசாரியர் வைபவம். பக்.8–9
21. அருணாசலம் பா பக்தி இலக்கியம் பக்–290–1

22. முதல் (திருவந்.)–86
23. ஷை – 44
24. ஷை –99
25. ஷை –50
26. ஷை – 95
27. ஷை – 14
28. ஷை – 28
29. ஷை – 68
30. ஷை – 91
31. திரு முதல்திருவந்–75
32. இரண். திருவந்–6
33. ஷை – 21
34. ஷை – 39
35. ஷை – 67
36. மூன். திருவந்–3
37. ஷை – 10
38. ஷை – 50
39. ஷை – 76
40. ஷை – 83
41. ஷை – 84
42. ஷை – 88
43. ஷை – 94
44. முதல் திருவந்–5
45. ஷை – 98
46. முத. திருவந்–74
47. இரண். திருவந்–60
48. மூன். திருவந்–63
49. சித்தர் பாடல்கள் (பதிப்புரை) பக். XV - XVI
50. அருணாசலம் மு; தமி இலக். பர.14–ஆம் நூர.ஆ.பத்.356
51. நான் திருவந்–1

52. வைஷ -2
53. வைஷ - 4
54. வைஷ - 5
55. வைஷ -
56. வைஷ - 9
57. வைஷ - 50
58. வைஷ - 96
59. விருத் -10
60. திருச்.விருத் -12
61. வைஷ - 76
62. வைஷ - 77
63. வைஷ -115
64. திருவந் -68
65. திருச்.விருத்.90
66. தண்டபாணி சுவாமிகள்; தமிழலங்காரம். பா.36
"மாதா வயிற்றிற் பிறந்த அன்றேசட வாயுவென்னும்
தீர்ந்திடாமற் சினந்துள நின்றிச் சிறந்துமலர்
வேதாவும் எய்தரும் பேறடைந்தாலும் வியன்றமிழாம்
தாதார் துழாய்நிகர் பாடல்செய் தான்பால் தஞ்சமென்றே"
67. அண்ணங்கராசாரியர்; ஆழ்வார்களின் வைபவம் பக்.24-25
68. கண்.நுண். 9. 1-2
69. திருவாய் 9. 4 : 9
70. வைஷ - (7 . 9 : 2)
71. வைஷ - (7 . 9 : 1) ( 2-3)
72. வைஷ - 7 . 9 : 6 (3 - 4)
73. வைஷ 10. 7 : 1
74. சுப்புரெட்டியார் தெய்வத்தமிழ். பக்.461
75. திருவிருத் 1. (3-4)
76. வைஷ 100 ( 2 -3)
77. வைஷ - 1

78. ஷை – 44
79. ஷை – 66
80. திருவாசிர் 1 : 10–14
81. ஷை 4. 1–9
82. ஷை பெரியதிருவந். 46
83. ஷை – 42
84. திருவாய் 1. 1 : 1
85. ஷை 1 . 1 : 7
86. ஷை 1 . 1 : 2
87. ஷை 1 . 1 : 5
88. ஷை 1 . 1 : 10
89. பகவத்கீதை (சரமசுலோகம்) 18 : 66
90. திருவாய் 1 . 3 : 1
91. திருவாய் 1 . 1 : 5
92. ஷை 1 . 5 : 10
93. ஷை 1 . 7 : 2
94. ஷை 10 . 7 : 2
95. ஷை 10 . 5 : 1
96. ஷை 10 . 4 : 1
97. ஷை 3 . 5 : 6
98. ஷை 3 . 5 : 9
99. ஷை 10. 10 : 11
100. உப.ரத். மாலை. பா. 26
101. கண். நுண்.1
102. ஷை ஷை –2
103. ஷை 3
104. ஷை 7 (1–2)
105. ஷை 9 (1–2)
106. மீனாட்சி சுந்தரனார் தெ.பொ.மீ; குலசேகரர் பக்.8–9
107. ஷை பக்.8

பெரு திருமொ. 1 . 1
ஷை ஷை 1 . 2
ஷை 1 . 3
ஷை 1 . 4
ஷை 1 . 5
ஷை 1 . 6
ஷை 3 . 1
ஷை 3 . 5
பெரு திருமொ. 3 : 7
ஷை 4. 1–10
ஷை 4 . 11
ஷை 1 . 7
ஷை 1 . 9
ஷை 2 . 1
ஷை 2 . 6
ஷை 5 . 1
ஷை 5 . 2
ஷை 5 . 3
ஷை 5 . 4 – 8
ஷை 4 . 10 ( 3 – 4)0
ருப்பல் 9 . 1 – 2
ரியாழ் திரு 5. 1 6 ( 2 – 4)
ண்டியப்பட்டர் தனியன்–3
ராமா. நூற். அந்–15
ருப்பல்–2
ஷ 5
ரியாழ் திரு 1. 1 9
டி 1 : 4 1
டி 1 . 5 10
டி 1 . 6 1

138. வை 1 . 7 : 1
139. வை 1 . 8 : 2
140. வை 1 . 8 : 3
141. பெரியாழ்திரு 5 . 4 : 9
142. வை 4. 5 : 6
143. வை 4. 1 : 5
144. வை 4. 9 : 9
145. வை 4. 10 : 1
146. வை 4. 9 : 2
147. வை 3 7 : 9
148. Ramanujam, B. V; History of Vaisnavism in S.I up to Ramanuja -25
149. வரதராஜ அய்யர் இ.எஸ்.தமிழ் இலக்கிய வரலாறு (கி.பி.1–1100) பக்.284–5
150. திருப்பாவை–5
151. வை 6 (5 – 8)
152. வை 3
153. வை 4
154. நாச். திருமொ. 4.5
155. வை வை 6.8
156. வை 1 . 4 . 4
157. திருமாலை –2
158. வை 1
159. வை 3
160. வை 9
161. வை 22
162. வை 42
163. வை 44
164. அமலனாதி 1 (உரை; திவ்யார்த்ததீபிகை)
165. வை 5.

## 2.2 திருமங்கையாழ்வார் வாழ்க்கைக் குறிப்பு

திருமங்கையாழ்வாரது வாழ்க்கை வரலாறாகப் பின் பழகிய பெருமாள் சீயர் குருபரம்பரையாலறியலாகும் செய்திகள் வருமாறு:-

சோழ மண்டலத்தில் திருவாலி நாட்டைச் சார்ந்த திருக்குறையலூரில் அவ்வாலி நாட்டுக்குத் தலைவரான கள்வர் குலத்தில் இவர் தோன்றியவர். நீலன் என்பது இயற்பெயர் தக்க பருவம் எய்தியதும் தந்தையின் உரிமைகளைப் பெற்று ஆலி நாட்டின் தலைவராகவும், சோழ மன்னனின் கீழ்த்தானைத் தலைவருள் ஒருவராகவும் விளங்கினார். அக்காலத்து, திருநாங்கூரில் மருத்துவராயிருந்த திருமாலடியார் ஒருவரது மகளான குமுதவல்லியார் என்ற பெண்ணை மணத்தற் பொருட்டு திருமால் சமயத்தைத் தழுவினார்; திருமாலடியார்களை ஆராதிப்பதில் தம் செல்வங்களையெல்லாம் செலவிட்டதுடன் அரசிறையாக இருந்த பொருளையும் செலவிட்டார். இதனை யறிந்த சோழமன்னன் இவரது அரசுரிமையைப் பறித்துக் கொண்டதுடன் இவரையும் சிறைப்படுத்தினான். சிறைப்பட்டிருந்த இவர் திருமாலைப் பலவாறு வேண்ட அப்பெருமானும் இவரது கனவில் தோன்றி, காஞ்சிபுரத்தே வந்தால் வேண்டிய பொருள் தருவதாக அருளினார். திருமங்கை மன்னனும் தாம் கொடுக்க வேண்டிய திறைப் பொருளைக் காஞ்சியிற் செலுத்துவதாக அறிவித்தான். அரசனும் இவரைக் காஞ்சிக்கு அழைத்துச் சென்று அங்கு அப்பொருளைப் பெற்றபின் சிறைவீடு செய்யுமாறு ஆணையிட்டான். கலியரும் காவலர்களுடன் கச்சி மாநகர் அடைந்து அங்கே திருமாலருளால் கிடைத்த பெருநிதியைச் செலுத்திச் சிறைவீடு பெற்றார். பின், திருமால் தொண்டு புரிதற்கு வேறு பொருள்

இல்லாததால் தம் குலத் தொழிலாகிய களவில், தமக்குற்ற நண்பர் சிலருடன் மூண்டு நின்றனர்.

ஒரு நாள் திருமணங்கொல்லையில் வழிப்பறிக்காக இவர் பதுங்கியிருந்தார். அப்போது திருமால் இவரது செயலைத் தீவினையாகத் திருவுள்ளம் பற்றாமல் நல்வினையாகவே நயந்து, அருள்பாலித்தற் பொருட்டு அந்தணர் வேடம் கொண்டு, பல அணிகலங்களைப் பூண்டு மணவாளக் கோலமாய்த் தம் மணவாட்டியுடன் பரிவாரங்கள் சூழக் கலியர் இருக்கின்ற திருமணங் கொல்லை வழியே வருகை புரிந்தனர். அவர்களைக் கண்டதும் கலியர் தம் கூட்டத்தோடு வந்து அவர்களை வளைத்து அவர்களிடமிருந்த பொருள்களையெல்லாம் பற்றிக் கொண்டு மூட்டையாக் கட்டி எடுக்க, அப்பொருட்குவை அசையாமல் இருந்தது. அது குறித்து வியப்படைந்த இவர், அவ்வந்தணனை நோக்கி, மந்திரவாதம் பண்ணினை போலும் என்று நெருக்கிக் கேட்டார். அவரும் அதற்கு "ஆம்" என்று சொல்லி எட்டெழுத்தை திருமந்திரத்தை உபதேசித்தருளினார். அவ்வளவில் நீலனும் பரஞான, பரபக்தி மேலீட்டால் தாம் செய்த தொழிலை வெறுத்து எம்பெருமானைப் பலவாறு பாடினார். எதிர்நின்ற கூட்டம் திடீரென்று மறைந்தது. திருமாலும் கருடன் மீது விண்ணுற நின்று காட்சியருளினார். இவ்வண்ணம் இறைவன், இயல்பாகவே பொங்கும் தன்பேரருளால் தம்மை ஆட்கொண்டதை எண்ணி ஆடிப்பாடி அகங்களித்து திருமால் திருக்கோயில் கொண்டுள்ள திருப்பதிகளுக்கெல்லாம் சென்று வழிபட்டு மங்களா சாசனம் செய்தார். சிவனடியாரான திருஞான சம்பந்தரைச் சீர்காழியில் சந்தித்தார்; அவரால் பெருமைப்படுத்தப்பட்டார். நாகபட்டனத்துப் பௌத்த விகாரத்திலிருந்த பொற் சிலையைக் கொள்ளையிட்டு அப்பொருளைக் கொண்டு திருவரங்கம் பெரு நகரின் சுற்று மதில் எடுத்தார். அத்திருப்பணி நடைபெற்றுக் கொண்டிருந்த காலை, தொண்டரடிப் பொடியாழ்வார் திருமாலுக்குத் திருமாலை சேர்க்கின்ற இடம் நேர்பட,

அவ்விடத்தைத் தப்பி ஒதுங்கத் திருமதில் எடுத்து முற்றுவித்தார். இவ்வாறு நெடுங்காலம் வாழ்ந்து, இறுதியில் திருக்குறுங்குடியில் தன்னடிச் சோதிக்கு எழுந்தருளினார்.

ஆ) வடகலை மூவாயிரப்படி குருபரம்பரை(2)
திருமங்கையாழ்வார் கலியுகத்தில் 398 ஆவதான நள வருடம் விருச்சிக மாதம் பூர்ணிமை வியாழக் கிழமை கூடின கிருத்திகை நட்சத்திரத்தில் திருவாலித் திருநகரியில் நீலன் என்கிற நான்காவது வருணத்தவருக்கு மகனாய்த் தோன்றியவர் எனக்குறிப்பிடுகின்றது.

இ) ஆழ்வார்களைப் பற்றிக் கூறும் திவ்விய சூரிசரிதம்[3]
திருமங்கையாழ்வாரால் வழிப்பறி செய்யப்பட்டவர் ஆண்டாளை மணம் செய்துவந்த திருவரங்கப் பெருமானே என்று கூறும்.

ஈ) காஞ்சி பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசியர் அவர்கள் குறிப்பிடும் செய்திகள் வருமாறு.

அவர்களது உடைமைகளையெல்லாம் அபகரித்தபின் அம்மணவாளப் பிள்ளையின் காலில் அணிந்துள்ள மோதிரம் ஒன்றைக் கழற்ற முடியாமையால் அதினையும் விடாமற் பற்களிலே கடித்துவாங்க, அம்மிடுக்கை நோக்கி எம்பெருமான் இவர்க்குக் கலியன் என்றொரு பெயர் கூறியருளினார். பறித்த பொருள் மூட்டையை எடுக்க முடியாமை கண்டு அவ்வந்தணனை நோக்கி "நீ என்ன மந்திரவாதம் பண்ணினாய்". என்று விடாது தொடர்ந்து தன் கையிலேந்திய வாட்படையைக் காட்டி அச்சமுறுத்தி நெருங்கினார். அப்போது அவ்வந்தணர் "அம்மந்திரத்தை உமக்குச் சொல்லுகிறோம் வாரும்" என்று அருகிலழைத்து, சகல வேதசாரமான திருவஷ்டா க்ஷரமாக மந்திரத்தை, முன்பு நர நாராயணராய்த் தனக்குத் தானே சொல்லிக் கொண்ட குறைதீர, இவர் செவியிலே உபதேசித்து, கருடாருடனாய் இவர் முன்னே எழுந்தளிச் சேவை சாதித்தார். சேவித்ததனாலும் முன்பு காலாழியைப் பற்களால் கழற்ற நேர்ந்த போது பகவத் பாதார

விந்தத்தில் வாயை வைத்ததனாலும் கலியன் அஞ்ஞான இருள் நீங்கித் தத்துவச் சுடர் எழுந்து எம்பெருமானைப் பரிபூரணமாக அனுபவித்து, அவ்வநுபவத்தாலுண்டான ஆனந்த அதிசயத்தை வெளியிடுமாறு ஆசு, மதுர, சித்திர, வித்தாரம் என்னும் நால்வகைக் கவிகளையும் பாடவல்ல பாண்டித்தியம் உடையராய் "வாடினேன்" என்று தொடங்கிப் பாடலுற்றார்.

உ) ஐம்படைகளையுடைய பெருமானது திருக்காலில் ஒரு மோதிரம் காணுதலும், அதனைப் பறிப்பதற்கு அரிதாகவே அதனைக் கழற்றப் பற்களைக் கொண்டு கடித்தனர். அப்போது பெருமாள் மிகவும் அன்புடையராயக் "கலியா" என்று கூறி அருள் பாலித்தனர் என அரிசமய தீபம் [5] கூறுகின்றது.

ஊ) மாறன் பணித்த தமிழ் மறைக்கு மங்கையர்கோன் ஆறங்கம் கூற அவதரித்தவர் என்று உபதேசரத்தினமாலை குறிப்பிடுகின்றது.

மேற்குறித்த நூல்கள் திருமங்கையாழ்வார் (அ) கலியுகத்தில் 398 ஆவதான நள ஆண்டிற் பிறந்தவர் (ஆ) திருவரங்கச் செல்வர் கோதைப் பிராட்டியாரை மணந்து, அப்பிராட்டியுடன் மணக்கோலமாகப் பரிவாரங்களுடன் செல்லுமிடையில் திருமணங்கொல்லை எனுமிடத்தில் அவர்தம் உடைமைகளையெல்லாம் கவர்ந்ததுடன் வாள்வலியால் எம்பிரானிடம் மந்திரோபதேசம் பெற்றார். (இ) திருஞான சம்பந்தரைச் சீர்காழியில் சந்தித்தார். (ஈ) திருவரங்கத் திருநகரில் சுற்று மதிலர் எடுங்குங்கால், தொண்டரடிப் பொடியாழ்வார் பெரிய பெருமாளுக்குத் திருமாலை சேர்க்கிற இடம் நேர்பட அவ்விடத்தைத் தப்பி ஒதுங்கத் திருமதிள் கட்டுவித்தார். (உ) நாகப்பட்டினத்துப் பௌத்த விகாரத்திருந்த பொற்சிலையைக் களவாடி அப்பொருள் கொண்டே திருவரங்கத் திருமதில் பணி புரிந்தார். (ஊ) மாறன் பணித்த தமிழ் மறைக்கு ஆறங்கம் கூற அவதரித்தவர். (எ) குமுதவல்லியாரைத் திருமணம் புரிதற் பொருட்டே திருமாலடியார் ஆனார். (ஏ) திருமாலின் திருவாழியைப்

பற்களால் கடித்த போது அப்பெருமானின் திருமேனிப் பரிசம் ஏற்பட்டது. எம்பெருமானிடம் மந்திரோப தேசம் பெற்றார். இறைவனின் தெய்வத் திருப்பணியைக் கண்டு அநுபவித்தார். (ஓ) திருமால் திருப்பதிகள் பலவற்றிற்கும் சென்று மங்களா சாசனம் செய்தார். (ஔ) இறுதியில் திருக்குறுங்குடியில் தன்னடிச் சோதிக்கு எழுந்தருளினார் என்பன போன்ற செய்திகளைத் தெரிவிக்கின்றனர். இவற்றை வரலாற்று அடிப்படையில் அணுக வேண்டியுள்ளது.

திருமங்கையாழ்வார் கலியுகத்தில் 398 ஆவது ஆண்டிற் பிறந்தவர் என்பதால் இவர் பல ஆயிரம் ஆண்டுகட்கு முன் வாழ்ந்தவராதல் வேண்டும். ஆழ்வார்கள் பல்லவர் காலத்தவர் என்பது வரலாறு கண்ட உண்மை. காலத் தொன்மைக்குத் தனிச் சிறப்பும், பெருமையும் உள்ளது என்று கருதியமையால் இவ்வாறு இவர் பிறந்த ஆண்டாகக் குறித்திருத்தல் வேண்டும். இனி, திருவரங்கச் செல்வர் கோதைப் பிராட்டியாரைத் திருமணம் புரிந்து, அப்பிராட்டியுடன் மணக் கோலமாகச் செல்லுமிடத்து அவர்களை வழிமறித்து அவர் தம் பொருள்களைக் கவர்ந்தார் என்பதால் கோதைப் பிராட்டியாரும், அவரது தந்தை, பெரியாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் சமகாலத்தவர் என்றாகிறது. ஆனால், ஆண்டாளும் பெரியாழ்வாரும் இவரது காலத்திற்கு முந்தியவர்கள். ஆண்டாள் திருமாலைக் கணவராகப் பெறவேண்டி நின்று இறுதியில் திருவரங்கப் பொருமானுடன் இரண்டறக் கலந்தார் என்பதன் அடிப்படையில் இவ்வாறு கூறியிருத்தல் வேண்டும். அடுத்து, சைவ சமய குரவருள் ஒருவரான திருஞானசம்பந்தர் கி.பி. ஏழாம் நூற்றாண்டினர் என்பது பொதுவாக ஏற்றுக் கொள்ளப்பட்டது. திருமங்கையாழ்வார் இச்சைவ அடியாரைச் சீர்காழியில் சந்தித்து உரையாடியதாகக் குறிப்பிட்டதை வரலாற்று அடிப்படையில் கொள்வதற்கு இல்லை என்றும், தமிழகத்தில் ஆதிக்கம் பெற்றிருந்த பௌத்தம், சமணம் ஆகிய புறச்சமயங்களை எதிர்ப்பதில் ஆழ்வார்களும் நாயன்மார்களும் ஒன்றிய கருத்துடையவர்களா-

யிருந்ததனால் கி.பி.11 அல்லது 12—ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த தமிழக வைணவர்கள் மேற்கூறிய ஒற்றுமை காரணமாக இத்தகைய புனைந்துரையை மேற்கொண்டிருக்க வேண்டும் என வரலாற்று ஆராய்ச்சி அறிஞர் நீலகண்ட சாஸ்திரி (7) அவர்கள் குறிப்பிடுகின்றார். மேலும், இவ்விரு மெய்யடியார்களது பாடல்களில் இவ்விருவர் சந்திப்புப் பற்றிய குறிப்பு எதுவும் காணப்படவில்லை. ஆதலின் திரு. சாஸ்திரி அவர்களது கருத்து ஏற்றுக் கொள்ளத்தக்கதாக உள்ளது. திருவரங்கப் பெருநகர்ச் சுற்று மதிள் எடுத்து காலத்து தொண்டரடிப் பொடியாழ்வார் திருமாலுக்குத் திருமாலை சேர்க்கிற இடம் நேர்பட்டது என்பதால், திருமங்கையாழ்வார் வாழ்ந்த காலத்துத் தொண்டரடிப் பொடியாழ்வார் முதிர்ந்தப் பருவத்தினராய் இருத்திருத்தல் கூடும்.

கி.பி.11—ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கடார வேந்தரை ஸ்ரீ மகாவிஜயோத்துங்க வன்மனால் நாகபட்டினத்தில் சூடாமணி பத்ம விகாரம் என்ற பௌத்தப் பள்ளி ஒன்று கட்டப்பட்டதென்றும், அதற்கு முதலில் இராச ராச சோழானால் கி.பி.1008—ஆம் ஆண்டு ஆனைமங்கலம் என்ற கிராமம் ஒன்று தானமாக்கப்பட்டது என்றும் சாசனத் தாலறியப் படுகின்றன. மேலும் இராசராசன் மகன் முதலாம் இராசேந்திரன் சாசனத்தில் இந்த பௌத்தப் பள்ளியைப் பற்றிய வரலாறு காணலாம். இராசேந்திரன் கி.பி.1013 முதல் 1045 வரை ஆட்சி செய்தவன். அவன் ஆட்சிக் காலத்தில் மேற்குறித்த விகாரம் நன்னிலையில் இருந்தது என்பது தெளிவாகும். இக்காலமே நாத முனிகளின் பெயரரான ஆளவந்தார் வாழ்ந்த காலம் என்பர்.(8) ஆழ்வார்களின் அருளிச் செயல்களைத் தொகுத்தளித்த நாதமுனிகளின் பெயரரான ஆளவந்தார் காலத்து இருந்து மேற்குறித்த பௌத்தப் பள்ளிக்குரிய பொற்சிலையைத் திருமங்கை யாழ்வார் களவாடினார் என்பதும், அதனைக் கொண்டே திருவரங்கத் திருமதிலைக் கட்டினார் என்பதும் புனைந்துரையென்பது புலனாகும்.

மாறன் பணித்த தமிழ் மறைக்கு மங்கையர் கோன் ஆறங்கம் கூற அவதரித்தவர் என்பதால் மாறன் எனப்படும் நம்மாழ்வாருக்குக் காலத்தால் பிற்பட்டவரே திருமங்கையாழ்வார் என்றாகிறது. நம்மாழ்வாருடைய பாடல்களில் தத்துவக் கருத்துக்கள் சிறப்பிடம் பெற்றுள்ளன. சமய நம்பிக்கை சமுதாயத்தினிடம் சிறப்பிடம் பெற்ற பின்பே, அச்சமய உண்மைகளை விளக்கும் சமயத் தத்துவக் கருத்துக்கள் சிறப்பிடம் பெறுவது வரலாற்று நியதியாகும். சமய நம்பிக்கையை வேர்விடச் செய்த பக்திப் பாசுரங்களையடுத்துச் சமய உண்மைகளை யுணர்த்தும் தத்துவக் கருத்துக்கள் தோன்றுதல் இயல்பாதலின், நம்மாழ்வார் ஏனைய ஆழ்வார்களுக்கெல்லாம் பின்னர் வாழ்ந்தவராதல் வேண்டும். எனவே திருமங்கையாழ்வாரது காலத்தைத் நம்மாழ்வாரது காலத்திற்குப் பின் கொண்டு வரல் பொருத்தமாகப் புலப்படவில்லை. இது காறும் கண்டவற்றால் கலியரது காலத்தைத் தெளிவாக காண முடியவில்லை.

திருமங்கையாழ்வாரது காலத்தே ஆராய்ந்து பெருமக்கள் பலருள், கே.கே. பிள்ளைவர்கள்[9] ஆழ்வார்களில் புகழ் பெற்றும் பொலிவுற்றவர்களில் ஒருவராகிய திருமங்கையாழ்வார் கி.பி. எட்டாம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் வாழ்ந்தவர் எனக் குறிப்பிடுகின்றார். இவ்வாழ்வார் இரண்டாவது நந்திவர்மன் காலத்திற்குப் பிற்பட்டவர் எனக் கொள்ளுதலே இயைபுடைத்தாம் என்றும் அவனது ஆட்சி கி.பி.784;785–ஆம் ஆண்டோடு முடிவடைந்தது எனக் கொள்ள வேண்டும் என்ற கருத்தை ஸ்ரீநிவாச பிள்ளையவர்கள்[10] வெளியிடுகின்றார். தென்னிந்திய வைணவ சமய வரலாற்றை ஆராய்ந்த அறிஞர் இராமாநுசம் அவர்கள், திருமங்கையாழ்வார் கி.பி.736–க்குச் சில ஆண்டுகளுக்குப் பின் வாழ்ந்தவராதல் வேண்டும் என்றும் கருதுகின்றார். இவர்களது கருத்துப்படி இவ்வாழ்வாரது காலம் கி.பி.எட்டாம் நூற்றாண்டின் நடுப்பகுதி அல்லது பிற்பகுதி என்றாகிறது.

திருமங்கையாழ்வார் திருமணப் பருவம் எய்தி, விரும்பிய பெண்ணை மணம் புரிந்து கொண்டவர்; குறுநில மன்னராகவும் தானைத் தலைவருள் ஒருவராகவும் திகழ்ந்தவர்; திருமால் கோவில் கொண்டுள்ள திருப்பதிகள் பலவற்றிறகும் சென்று மங்களா சாசனம் செய்தவர்; திருவரங்கப் பெருநகரின் திமுதிளைக் கட்டி முடித்தவர் என்பதால் இவர் நீண்ட காலம் வாழந்திருத்தல் வேண்டும். ஆதலின் திருமங்கையாழ்வாரது காலத்தை கி.பி. எட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதிக்கும் ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதிக்கும் இடைப்பட்ட காலம் எனக் கொள்ளின் தவறாகாது.

இவ்வாழ்வார் திருமாலின் திருவருளால் கச்சிமா நகரில் பெரும் பொருள் பெற்றார் என்பதும், திருமணங் கொல்லையில் திருமாலை மணவாளக் கோலத்தில் வருகைபுரிந்து எதிர்ப்பட்டார்; கலியன் தம் பற்களால் பெருமாளின் திருவாழியைக் கழற்றக் கடித்த காலை அப்பெருமானின் திருமேனியைத் தீண்டும் பேறு பெற்றார்; எம்பெருமான் மந்திரோபதேசம் அருளியதுடன் பொங்கும் பரிவால் தானே தன்னைக் காட்டித்தம் தெய்வத் திருமேனியைக் கண்டு அநுபவிக்குமாறு அருள்புரிந்து இவரை ஆட்கொண்டார் என்ற செய்திகள் பிற மெய்யடியார்களின் வாழ்க்கையில் நிகழ்ந்தனவாகக் கூறப்பட்டுள்ள அற்புத நிகழ்ச்சிகள் போன்றே தெரிய வருகின்றன.

இவரது இயற்பெயரும் நீலன், இவரது தந்தையின் பெயரும் நீலன் என்பதால் நீலன் மகன் என்பது பெறப்படுகிறது. நீனிற வண்ணாகிய திருமாலைக் குறிக்கும் சொல்லே நீலன் என்பது புலனாகும். வழிபடு தெய்வம், குலமுதல்வர் ஆகியோர் பெயர்களை மக்களுக்கு இட்டு அழைப்பது மரபு. "எந்தை தந்தை தம்மானென்றென் றெமரே ஏழ்ழளவும் வந்து நின்ற தொண்டர்"

"எம்மானு மெம்மனையும் எனைப்பெற்றொழிந்த தற்பின் –
அம்மானு மம்மனையும் அடியேனுக் காகிநின்ற –
நன்மான வெண்சுடரே (13) "எந்தாதை தாதையப்பால் எழுவர்

படிவடிமைவந்தார் "[14] என்பனவற்றால் பரம்பரையாகத் திருமாலடியவர்கள் என்பதும் பெற்றோர்கள் இறந்த பின்னரும் இவர் அவ்வடிமைத் திறத்தில் முனைந்து நின்றவர் என்பதும்; உறுதிப்படுகின்றது. ஆதலின் இவர் திருமாலடியார் ஆவதற்குக் குமதவல்லியார் திருமணமே காரணம் எனக் கொள்வதற்கில்லை. குமுதவல்லியாரின் வளர்ப்புத் தந்தையார் திருமாலடியார் என்பதால் இவ்வம்மையாரும் இளமையிலேயே, திருமால் பக்தியில் சிறந்து விளங்கியிருந்திருக்கலாம், திருமங்கை மன்னரை மணந்த பின்னர் அவரது திருமால் தொண்டிற்கும், சமய வாழ்க்கைக்கும் இவ்வம்மையார் உறுதுணையாக இருந்திருக்கலாம்.

இறைமையுணர்வு பெற்ற மெய்யடியார்களது பாடல்களில் காணப்பெறும் உலகியல் நிகழ்ச்சிகள், மக்கள் மேல் உள்ள பெருங்கருணையால் அவர்களது குற்றம், குறை, பிழைகளையெல்லாம் தம் மேல் ஏற்றிப் பாடுவதாகவே கருத வேண்டியுள்ளது. அவற்றை அவ்வடியார்களது வாழ்க்கையில் முற்பகுதியான உலகியல் வாழ்க்கை நிகழ்ச்சிகள் எனக் கொள்வதற்கு வரலாறும் பிறவும் துணை செய்ய வேண்டும். "பொய்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும்– புழுத்தலைப் புலையனேன்" [15] என்றும் "யானேபொய்என் நெஞ்சும், பொய் என் அன்பும் பொய்" [16] என்றும் மாணிக்கவாசகர் குறிப்பிடுவது கொண்டு இவரது வாழ்க்கையின் முற்பகுதி இத்தகையதே எனக் கொள்ள இயலுமா? "உயர்ந்தேன் மனைவாழ்க்கையும் ஒண் பொருளும்"[17] "மக்களை மணந்த தாரமன்வயிற்றவரை யோம்பும் சிக்குளேயழுந்தி" [18] "பாலனாய்க்கழிந்த நாளும் பனிமலர்க் கோதைமார்தம் மேலனாய்க்கழிந்த நாளும் குறிக்கோளிலாது கெட்டேன்"[19] என்பன கொண்டு திருநாவுக்கரசர் இல்லற வாழ்க்கைச் சிக்கலுள் அழுந்தியவர்–பனிமலர்க் கோதைமார் மேலனாய்த்திரிந்தவர்–முதுமைக் காலத்திற்கூட அவர் குறிக்கோளின்றி இருந்தவர் என்றும் "கள்ளனேன் கள்ளத்

தொண்டாய்க் காலத்தைக் கழித்துப் போக்கி"[20] என்ற குறிப்பினைக் கொண்டு இவர் களவுத் தொழில் புரிந்தவர் எனக் கொள்ள முடியுமா? இவர்தம் தனிவாழ்க்கை வரலாறு மேற்குறித்தவாறு நமக்கு அறிவிக்கவில்லையாதலால் அவ்வாறு இவரது உலகியல் வாழ்க்கையின் முற்கூறு இருந்தது எனக் கொள்ள முடியவில்லை. தொண்டரடிப் பொடியாழ்வாரும் "சூதனாய்க் கள்வனாகித் தூர்த்தரோடிசைந்த காலம்"[21] என்பதால் இவரது முந்தைய வாழ்க்கை இவ்வாறு இருந்தது எனக் கொள்வது இல்லை. இதைப் போன்றே "திருமங்கையாழ்வாரும் கள்வனேன் ஆனேன் படிறுபல செய்திருப்பேன்"[22] "சூதினைப் பெருக்கிக் களவினைத் துணிந்து.. திரிந்த தொண்டனேன்"[23] "கள்ளத்தேன் பொய்யகத்தேன்"[24] என்று குறிப்பிடுகின்றார். மேலும் "பெரியேனாயின பின் பிறர்க்கே யுழைத்தேழை யாயினேன்"[25] என்பதால் இவ்வாழ்வார் அரசர் முதலிய பிறருக்குப் பெரிதும் உழைத்துத் தம் வாழ்நாளில் ஒரு பகுதியைக் கழித்தவர் என்பதும் தெரியவருகின்றது.

திருமங்கையாழ்வார் சிற்றரசராகவும் தானைத் தலைவராகவும் இருந்தவராதலின் தன் மன்னனுக்காகப் போரிட்டு எதிரியின் நாட்டைக் கைப்பற்றி, அந்நாட்டு மன்னனின் உடைமைகளையும் கொள்ளையிட்டிருக்கலாம். உலகியல் வாழ்வினின்றும் விடுபட்டு மெய்ஞ்ஞானம் பெற்ற காலத்தில் தமது முந்திய செயல்களைக் குறித்து வெறுப்புணர்ச்சி தோன்றப் பாடியிருக்கலாம் என்றாலும் மன்னனதுஆணையின் படி மேற்குறித்தவை செய்யப்பட்டவைகளாதல் வேண்டும். வஞ்சகத்தாலோ வேறு தவறான வழிகளிலோ பிறர் பொருளை அபகரிப்பவனும் கள்வன்தான். பேராசையோடு திக்கு விசயம் செய்து நாடு திருடும் அரசனையும் கள்ளன் என்றே பேரறிஞர்கள் துணிகிறார்கள். பக்தர்களோ ஈசுவரனுக்குரிய ஆத்மாவை "எனது என்று

அபிமானிப்பவனையும் ஆத்மாபகாரம் செய்யும் கள்ளன் என்றே தீர்மானிக்கிறார்கள்" [26] ஆதலின் இவர் தம் பாடல்களில் காணப்படும் "கள்வனேன்", களவினைத் துணிந்த தொண்டன் போன்றவை ஞான அனுபவமேயன்றி இவர்தம் வாழ்க்கை நிகழ்ச்சிகள் அல்ல எனக் கொள்ளலாம். மேலும், ஸ்ரீ வைஷ்ணவர்கள் இப்படிப்பட்ட கதைகைள மதவிசுவாசத்தோடு போற்றிவந்த போதிலும் ஆழ்வார் களவாடிக் கைங்கரியம் புரிந்தவர் என்பதற்கும், அந்தச் செயலை நற்செயலாகவே கொண்டு அருள்புரிந்தான் என்பதற்கும் இவர் வாக்குகளில் துளியும் ஆதாரம் கிடையாது என வைணவப் பெரியார் திரு.பி.ஸ்ரீ [27] அவர்கள் தெளிவுபடுத்துகின்றார்.

இவ்வாழ்வார் வழிப்பறி செய்தற் பொருட்டுப் பதுங்கியிருந்த இடத்தின் பெயர் "திருமணங்கொல்லை" எனக்குறிக்கப்பட்டுள்ளது. திருமணம் புரிந்து வந்தோரிடம் அவர்தம் பொருள்களைக் கொள்ளையிட்ட இடமாக இருந்து "திருமணங்கொல்லை" யென்பது இவ்வாழ்வார் வாழ்ந்த காலத்தில் "திருமணங்கொல்லை" என வழங்கப் பெற்றிருக்கலாம். கள்வர் குலத்திற் பிறந்தவர் என்பதாலும் இவரது பாடல்களிற் காணப்படும் "கள்வனேன்" என்பது கொண்டும் மேற்குறித்த இடத்தினையும் இவரையும் இணைத்துக் களவுத் தொழில் புரிந்தவர் என்றும், பின் நாகபட்டினத்திருந்த பொற்சிலையைக் களவாடியவர் என்றும் அப்பொருள் கொண்டே கைங்கரியம் புரிந்தவர் என்றும் பிற்காலத்தவர் கதைபுனைந்தனர் எனின் பிழையாகாது.

திருமங்கையாழ்வார் ஆலி நாட்டுக்கும் திருமங்கை, குறையல் என்ற பகுதிகளுக்கும் தலைவர்.[28] திருமங்கையென்பது பலமாட மாளிகைகள் நிரம்பிய பேரூர்.[29] இவருக்கு அருள்மாரி, அரட்டமுக்கி, ஆலிநாடன்; அடையார் சீயம், மங்கை வேந்தன், பரகாலன், கலியன், கலிகன்றி [30] முதலிய பல பெயர்களுண்டு. வரையாது வழங்கும் வள்ளன்மையும் அதனால் புலவர் போற்றும் பெரும்

புகழுடன் வாழந்தவர்.[31] கைம்மாறு கருதாது உலகோர்க்கு வழங்கும் மாரி போன்ற பேரருளான் [32] பரந்த நூலறிவும் தமிழ்ப் பெரும் புலமையும் கவியாடும் திறமும் உடையவர்.[33] பொய்ம் மொழி யொன்றில்லாத மெய்ம் மொழியாளர்.[34] மனைவி மக்கள் பலருடையவர்.[35] அமரில் போர் செய்யவல்ல பெருஞ் சேனையுடையவர்.[36] யானைப்படைக்குத் தலைமையும் போரில் அதனை நடத்தும் திறமையும் உடையவர்.[37] பகைவரை வெல்லும் குதிரைவீரன்.[38] வாட் போரில் பகைவரின் உடல் துணிக்கும் வாள்வீரர் [39] திண்ணிய தோள்வலி மிக்கவர்[40] தேர்ப்படைகளையுடையவர் [41] வேல் வல்லார் [42] பெருஞ்செல்வ முடையவர் [43] வேட்டையாடுவதில் பெருவிருப்ப முடையவர் [44] வயது வந்த பின்னரும் பிறர்க்கே உழைத்துத் தம் வாழ்நாளில் ஒரு பகுதியைக் கழித்தவர் [45] திருமாலையன்றி மறந்தும் புறம்தொழா மாண்புடையவர்[46] தெளிவுற்றுத் திருமால் அருளைச் சிக்கெனப் பெற்றவர்.[47] மனைவி மக்களை முற்றும் துறந்தவர், [48] திருமாலடியார் என்று தேசமரியத் திருப்பதிகள் தோறும் சென்று திரிந்தவர்.[49] ஆகியவற்றை இவரது வாழ்க்கை வரலாற்றுச் செய்திகளாக இவ்வாழ்வாரது அருளிச் செயல்களில் அறியக் கிடைக்கின்றன.

## 2-2 திருமங்கையாழ்வார் வாழ்க்கைக் குறிப்பு, அடிக்குறிப்பு

1. பின்பழகிய பெருமாள் சீயர் – ஆறாயிரப்படி குருபரம் பரைப்பர பாவம் – பக்.69–87.
2. ஸ்ரீமத்தீருதீய ப்ரஹமதந்தர ஸ்வதந்த்ரஸ்வாமி – மூன்வாயிரப்படி குருபரம்பராப்ர பாவம் – 40.
3. வரதராஜ அய்யர். இ.எஸ். – தமிழ் இலக்கிய வரலாறு பக்.340.
4. ஆழ்வார்கள் வைபவம். பக்.54
5. கீழையூர்ச் சடகோபதாசர் – பரகாலச் சருக்கம் – பாடல்.131.
"இடையோர் பணித்துணியும் இலதொரு மோதிர மெழிலைம்
படையோன் கரத்தினிற் காண்டலும் பறித்தான் பறிக்கரிதாப்
உடையோன் விரலினைப் பற்கொடு கறித்தான் றுளவுயர்பூந்
தொடையன் கலியா வென்றருள் சொரிந்தான் மிகப்பரிந்தான்".
6. மணவாள மாமுனிகள் – உபதேச ரத்தினமாலை பாடல் – 9.
7. Nila Kanta Sastri. K.A. - The Cholas p.636. "One such tale is that of a friendly meeting between Nana Sambandar and Thirumangai Alvar... Impossible as history, this a beautiful legend enshrines the belief in common mission of Saivism and Vaisnavism entertained by the Tamil vaisnavas of the eleventh or twelfth centuries - In stemming the strong current of anti-vedic heresy, the alvars and the nayanmars had laboured together in the past and what was more natural for their successors than to bring together the great saiva antagonist of Jainism/Saiva and the equally great Vaisnava opponent of Buddism."
8. வரதராஜ அய்யர் – தமிழ் இலக்கிய வரலாறு. பக்.376
9. தென்னிந்திய வரலாறு (முற்பகுதி) பக்.155.

10. தமிழ் வரலாறு (பிற்பாகம்–முற்பகுதி) பக்.155
11. History of Vaishnavism in South India up to Ramanuja
12. பெரிதி. மொ.4. 9 : 9
13. ஷை 7. 2 : 3
14. ஷை 7 .2 : 6
15. திருவா – பிடித் .பத்.3
16. ஷை – ஆனந். பர. 10.
17. தேவா – 4ஆம் தி.மு.–7
18. ஷை – ஷை – 765
19. ஷை – 6–ஆம் தி.மு.344
20. ஷை – 4 – ஆம் தி.மு.728
21. நாலா.பிர – திருமாலை – 16.
22. ஷை பெரிய தி.மொ. 1 . 1 : 5
23. ஷை ஷை ஷை 1 . 6 : 3
24. ஷை ஷை ஷை 7 . 4 : 9
25. ஷை ஷை ஷை 1 . 1 : 7
26. பி.ஸ்ரீ – திவ்யப் பிரபந்த ஸாரம். .பக்.187
27. ஷை ஷை ஷை பக்.189
28. நாலா. பி. – பெரிய. தி.மொ. 4 . 4 : 10 (கூரணிந்த.. குறையலாளி)
29. ஷை ஷை ஷை 1 . 9 : 10 (திண்ணார் .... திருமங்கை)
30. ஷை ஷை ஷை 3 . 4 . 10 (ஆலிநாடன் . . கலியன்)
31. ஷை ஷை ஷை 2 . 8 . 10 (காமருஞ்சீர்க்கலிகன்றி)
32. நாலா.பி.பெரிய. தி.மொ. 3 . 2 : 10 ( அலை நீருலகுக்கு. . . கலிகன்றி)
33. ஷை ஷை ஷை 1 . 7 : 10 (இருந்தமிழ் நூற் புலவன்)
    " " " 7 . 2 : 2 (பாடேன். . பனுவல்கொண்டு)
    " " " 7 . 2 : 2 (பாடேன் . . . பனுவல்கொண்டு)
    " " " 10 . 1. : 10. (கற்ற நூல் கலிகன்றி)
34. " " " 6 . 6 : 10

| | | | |
|---|---|---|---|
| 35 | " " | " | 6 . 10 : 10 (காவித்தடங்கள் மடவார்கோன்) |
| | " " | " | 6. 2 : 4 (பிரிந்தேன் பெற்ற மக்கள்) |
| 36. | " " | " | 2 . 4 10 (வாட்டிறற்றானை – மங்கையர் தலைவன்) |
| 37. | " " | " | 2 . 5 : 10 (கடமாருங் . . . கலிகன்றி) |
| 38. | " " | " | 5 . 8 : 10 (நன்னலர் . . . ஆடல்மாவலவன்) |
| 39. | " " | " | 3 . 9 : 10 (மருவலர் . . . பரகாலன்) |
| 40. | " " | " | 7 . 2 : 10 ( கனினீர . . . கலிகன்றி) |
| 41. | " " | " | 7 . 4 : 10 (வாமன்றேர்ப்பரகாலன்) |
| 42. | ஷை | ஷை | 10 . 9 : 10 |
| 43. | ஷை | ஷை | 1 . 4 : 10 |
| 44. | ஷை | ஷை | 1 . 6 : 6 |
| 45. | ஷை | ஷை | 1 . 9 : 7 |
| 46. | ஷை | ஷை | 10 .8 : 7 (அடியேன் பின்னுமுன் சேவடியன்றி நயவேன்) |
| | " | " | 6 . 3 : 5 (மற்றோர் தெய்வம் . . பிறவாமை) |
| | " | " | 6 . 3 : 7 (கூறேன் . . . தெய்வம் ) |
| 47. | ஷை | ஷை | 1 . 1 : 5 (கண்டவா . . பெற்றேன்) |
| 48. | " | " | 6 . 2 : 4 |
| 49. | ஷை | ஷை | 4 . 9 : 4 (தேசமறிய உமக்கேயாளாய்த் திரிகின்றேமுக்கு). |

## 2.3 சாத்திரமும் தோத்திரமும் - வைணவம் இவரது பாசுரச் சிறப்பு

அருளோடு கூடிய பரம்பொருளாய திருமாலே பெறத்தக் செல்வம் என்பது வைணவத்தின் சீரிய கோட்பாடாகும் அச்செல்வத்தின் பயனையடைந்த அவனது மெய்யடியார்களே ஆழ்வார்கள். அவர்கள் பெற்ற இன்ப அனுபவமே சொல்வடிவு பெற்று அருட்பாடல்களாக, பாசுரங்களாக ஊற்றெடுத்துப் பெருவெள்ளமாய்த் தமிழகமெங்கும் ஏறத்தாழ கி.பி. ஐந்தாம் நூற்றாண்டு முதல் ஒன்பதாம் நூற்றாண்டு வரை பரவி ஓடியது. ஆழ்வார்களின் பாசுரங்கள் உயிரினுள் உயிராய் நின்று இலங்கும் திருமாலின் திருவருள் பற்றியது ஆதலின் அவை சொற் பொருளுக்கு அப்பாற்பட்டவை என்பதும் உள்ளார்ந்த மறைப்பொருளைக் கொண்டவை என்பதும் வைணவர்களது கோட்பாடு. இதனால், தமிழ்மறை என்றும், திராவிட வேதம் என்றும் தென்னாட்டு வைணவர்கள் ஆழ்வார்களது அருட்பாடல்களின் தொகுப்பாகிய நாலாயிர திவ்வியப்பிரபந்தத்தைப் போற்றுவது சாலப் பொருந்தும். சமயத்துறைக்கு மட்டுமன்றி தமிழ் இலக்கியத் துறைக்கும் உரிய சீர்மையுடன் திகழ்வதால் அச்சமயப் பற்றுடையவர்களேயன்றித் தமிழ்ப் பற்றுடையவர்களும் ஆழ்வார்களின் பாசுரங்களைப் பயில்வது நடைமுறையில் உள்ளது. எனவே, வைணவ சமயத்திற்கு உயிர்நாடியாகவும் இலக்கியத் துறைக்குச் சீரிய செல்வமாகவும் திகழ்வதுடன், தமிழகச் சமய வரலாற்றில் புதியதோர் திருப்பத்தை – எழுச்சியை உருவாக்கிய சிறப்பும், நாலாயிரத்திற்கு உண்டு எனக் கொள்ளலாம்.

ஆழ்வார்கள் இறையின்பத்துள் திளைத்து மகிழும் நிலையில் தாம் அனுபவித்த அப்பெருநலங்களையெல்லாம் மக்களனைவரும் பெற்றுய்யுமாறு செந்தமிழ்ப் பாசுரங்களாக அருளினர். ஆதலின்

"அருளிச் செயல்கள்" என அவை போற்றப் படுகின்றன. இறைவனால் அருளிச் செய்தனவாகக் கருதப்பெறும் வடமொழி வேதங்களை "வாய்மொழி; எழுதாக்கிளவி" என்பர். அவற்றைக் கற்பதற்கு அனைவரும் உரியரல்லர். ஆனால் தமிழ்மறையாகிய ஆழ்வார்களின் அருளிச் செயல்களைக் கற்றற்கு அனைவரும் உரியராவர். இத்தகு சிறப்புடைய நாலாயிரத்தை அருளிய ஆழ்வார்களுள் திருமங்களையாழ்வாரே பக்திப் பாடல்களைப் பொருந்தொகையாகப் பாடியவர். மேலும் ;தாண்டகம், மடல், எழுகூற்றிருக்கை" ஆகிய பல்வேறு பாட்டியல் வகைகளை ஆழ்வார்களுள் பாடியவரும் இவரே. ஆதலின் இவ்வாழ்வாரைத் திருமால் திருவருள் நலஞ்சார்ந்த செந்தமிழ்ப் பெரும்புலவர் எனின் தவறாகாது.

## *அருளிச் செயல்கள்*

பெரியாழ்வார், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார், ஆகிய மூவரும் ஆழ்வார்களுள் பெரியகவிகள் என்பதனை அவர்களது அருளிச் செயல்களைக் கொண்டே அறிய முடிகின்றது. நாலாயிரத்துள் இம்மூவரது பாடல்களும் முறையே முதலிலும், இடையிலும், முடிவிலும் இடம்பெற்றுத் திகழ்கின்றன. இவ்வமைப்பு முறையை மனித வாழ்க்கையுடன் ஒப்பிடின், தூய்மையான குழந்தைப் பருவத்தின் இன்பத்தைப் பருகும் பகுதியாகப் பெரியாழ்வாரது பாடல்களையும், வாலிபம் அடைந்து, காதல் வாழ்க்கையில் ஈடுபட்டு உலக வாழ்வில் உழன்று, பின்னர் இறைவனிடம் பக்தி கொள்ளும் பகுதியாகத் திருமங்கையாழ்வாரின் பாடல்களையும், இறுதியில் ஞானம் பெற்றுச் சிறப்புறும் நிலையினைப் போன்று நம்மாழ்வாரின் அருளிச் செயல்களையும் கொள்ளலாம். மேற்குறித்த காரணம் கருதியே நாலாயிரத்துள் திருமங்கையாழ்வாரின் அருளிச் செயல்களை நடுநாயகமாக நாதமுனிகள் வைத்தனர் போலும். பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவெழுகூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரியதிருமடல் ஆகிய ஆறுபிரபந்தங்களை

அருளியவரும் இவ்வாழ்வரே. இவற்றுள் பெரியதிருமொழி திருக்குறுத்தாண்டகம், திருநெடுந்தாண்டகம் ஆகிய மூன்றும் இசைப்பாக்களாதலின் இசைப்பா ப்குதியான இரண்டாம் ஆயிரத்தில் திகழ்கின்றன. திருப்பல்லாண்டு முதல் கண்ணிநுண் சிறுத்தாம்பு இறுதியாகவுள்ள பகுதியை ஆயிரம் பாசுரங்களில் சிறிது குறைந்திருப்பினும் முதலாயிரம் என வழங்கப்படுவதைப் போன்றே ஆயிரம் பாசுரங்கட்கு மேற்பட்டிருந்தாலும் பெரியதிருமொழி திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம் ஆகிய மூன்றையும் சேர்த்து இரண்டாவது ஆயிரம் எனக் கொள்ளப்படுகின்றது. இவ்வாழ்வார் அருளிய மற்றைய பிர்பந்தங்களான திருவெழுக்கூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல் ஆகிய மூன்றும் இசைப்பாக்கள் அல்லாமையாலும், இயற்றமிழ்ப் பாக்கள் ஆதலாலும் இயற்பாத் தொகுதியோடு சேர்க்கப்பட்டிருப்பது பொருத்தமாகத் தோன்றுகின்றன.

## அ) பெரிய திருமொழி

பதினோரு பத்துக்களைக் கொண்ட 1084 பாசுரங்கள் அடங்கிய இப்பிரபந்தம் இரண்டாம் ஆயிரத்துள் உள்ளது. "திருமொழி" என்ற தொடர் "திருவாசகம்" என்பது போல அடையடுத்த கருவியாகு பெயராகும், ஆதலின் "சிறந்த மொழிகளாகிய நூல்" என்ற பொருளைத் தருகிறது. பெரியாழ்வார் அருளிய திருப்பல்லாண்டு நீங்கிய பகுதியைப் பெரியாழ்வார் திருமொழியென்றும், கோதை நாச்சியார் என்னும் ஆண்டாள் அருளிய ஒரு பிரபந்தம் திருமொழியென்றும், கோதை நாச்சியார் என்னும் ஆண்டாள் அருளிய ஒரு பிரபந்தம் நாச்சியார் திருமொழியென்றும், குலசேகரப்பெருமாள் அருளிய பிரபந்தம் பெருமாள் திருமொழியென்றும் பெயர் பெற்று விளங்குகின்றன. இவைகட்கு முறையே இப்பெயர்கள் இப்பிரபந்தங்களைச் செய்தவர்களை முன்னிட்டு வழங்கப்பெற்றமை புலனாகும். ஆனால் திருமங்கையாழ்வார் அருளிய இப்பிரபந்தத்தைச்

செய்தவரை முன்னிட்டு இப்பெயர் வழங்காமல் "பெரிய திருமொழி" என சிறப்புற வழங்குவதற்குக் கீழ்க்காண்பனவற்றைக் காரணங்களாகக் கருதலாம்.

(அ) பெரியாழ்வார், கோதைநாச்சியார், குலசேகரப் பெருமாள் ஆகியோர் அருளிய திருமொழிகள் அனைத்திலும் காணப்பெறும் பாடல்களிலும் மிகுதிபற்றி இது "பெரிய திருமொழி" என வழங்கப்பட்டிருக்கலாம்.

(ஆ) "வாடினேன் வாடி வருந்தினேன் . . . . . . . . . . . நான் கண்டு கொண்டேன் நாராயணாவென்னும் நாமம்" (50) எனத் தொடங்கிய இவ்வாழ்வார், எட்டெழுத்துத் திருமந்திரம் தோன்றிய இடமாக — திருப்பதியாகக் கொள்ளப்படும் பத்திரியாச்சிரமத்தைச் சேர இமயமலை மீது ஏறி, அங்குள்ள தலங்களை மங்களாசாசனம் செய்தார். சாளக்கிராமத்தையடைய நெஞ்சுக்கு உபதேசித்து, நைமிசாரணியம், அகோபிலம் என்கின்ற சிங்கவேல் குன்றம் என்ற வடநாட்டுத் திருப்பதிகளை மங்களாசாசனம் செய்தார். அதன்பின் தொண்டை நாடு, நடுநாடு, சோழநாடு ஆகியவற்றிலுள்ள திருமால் பதிகளைச் சேவித்த பின் சேர, பாண்டிய நாட்டுத் தலங்கள் சிலவற்றையும் மங்களாசாசனம் செய்தார். இறுதியாகத் திருக்கோட்டியூரில் தமது யாத்திரையை முடித்தனர் எனக் கருதுமாறு "பெரிய திருமொழி" அமைந்துள்ளது. ஆதலின் திருமால் திருப்பதிகள் பலவும் சென்று பாடல் தொண்டு புரிந்தவர் என்பதுடன், மற்றைய ஆழ்வார்களினும் இவ்வாழ்வாரே மிகுதியாக மங்களாசாசனம் செய்தவர் என்பதும் அறியக் கிடைக்கின்றன. இச்சிறப்பும் பெருமையும் கருதி இவரது இப்பிரபந்தத்திற்குப் "பெரியதிருமொழி" எனப் பெயர் வழங்கப் பெற்றிருக்கலாம். இந்திய நாட்டின் வடஎல்லையாகிய இமயம் முதல் தென்னாட்டின் பகுதிகள் பலவற்றிலும் உள்ள திருமால் தலங்களைச் செந்தமிழ் பாசுரங்களால் பாடிச் சமயத்துறையில் தேசீய ஒருமைப்பாட்டிற்குச் சிறப்பு செய்தவராதலின் இவரது அருட்பாடல்கள்

தேசிய உடைமையாகக் கருதும் அளவிற்கு பெருமையுடையவை எனில் தவறாகாது. ஆதலின் அப்பெருமை கருதியும் இதற்கு இப்பெயர் வழங்கப்பட்டிருக்கலாம்.

(இ) ஐம்புல இன்பங்களில் ஆழ்ந்து திரிந்த திருமங்கை மன்னனைச் சாத்திரங்களால் திருத்த முடியாது என்று அழகைக் காட்டித் திருமால் தன்பால் ஈடுபடச் செய்தான். அவர் தன்னிடம் கொண்ட பற்று சம்பந்த உணர்ச்சியோடு கூடியதாக அமையாவிட்டால் நிலைத்து நிற்காதெனக் கொண்டு, திருமந்திரத்தையும் திருக்குணங்களையும், திருமந்திரப் பொருள் முடிவான திவ்விய சேதங்களையும் அவருக்குக் காட்டிக் கொடுத்தான் எனப் பெரியவாச்சான் பிள்ளையவர்கள் திருநெடுந்தாண்டகம் வியாக்கியான அவதாரிகையில் குறிப்பிடுவர்.[51] இதனால் உலகியலில் உறங்கிக் கிடந்த இவ்வாழ்வாரைத் தட்டி எழுப்பி எம்பெருமான் தானே தன்னைக் காட்டி மந்திரோபதேசம் செய்து திருவருள் புரிந்தார் என்பது புலானாகின்றது. ஆதலினாலேயே இவ்வாழ்வாரும் எட்டெழுத்துத் திருமந்திரத்தின் சீர்மையை இருபது பாடல்களில் [52] பாடி அருளினார் எனலாம். இக்காரணங்களைப் பற்றி இவரது இப்பிரபந்தம் பெரிய திருமொழி எனப் பெயர் பெற்றது எனக் கொள்வதும் பொருத்தமாகத் தோன்றுகிறது.

பெரிய திருமொழியின் பதினோராம் பத்தும், மூன்றாம் திருமொழியிலுள்ள பத்து பாடல்கள் மட்டும் அந்தாதித் தொடையாக உள்ளன. பிள்ளைத்தமிழ் கூறுகள் மகளிரின் விளையாட்டுக் கூறுகள், தூதுப்பிரபந்தத்தின் கூறுகள் போன்றவற்றையும் இதனுள் காண முடிகின்றது. பெரிய திருமொழி பலதிறப்பட்ட உணர்ச்சிப் பெருங்கடல் என்றும், அதில் மூழ்கித் திளைத்தவர் கொஞ்சம் இளைப்பாறி மன அமைதி பெற்ற பிறகுதான் நம்மாழ்வாரின் ஞானப்பாடல்களாய் திருவாய்மொழியில் இறங்க முடியும். இது மனத்தின் இயல்பைச் சார்ந்த ஒரு தத்துவம், இவ்வாறு இளைப்பாறக் கூடிய இடமாகவே இயற்பா

பெரிய திருமொழிக்கும் திருவாய் மொழிக்கும் இடையே அமைந்திருக்கிறது எனக் கருதலாம் என்று வி.சுப்பிரமணிய அய்யர் [53] குறிப்பிடுவது பொருத்தமாகத் தோன்றுகிறது.

## *திருத்தாண்டகங்கள்*

தாண்டகம் என்ற புதிய மரபினைப் பற்றி இலக்கியத் துறையில் தோற்றுவித்து இடைக்காலத் தமிழுக்கு நன்கொடையாக வழங்கிய பெருமக்கள் இருவர். அவர்களுள் சைவ சமய குரவருள் ஒருவர் அப்பர் பெருமான். மற்றையவர் திருமங்கையாழ்வார் ஆவார். இவ்விருவருள்ளும் "திருக்குறுந்தாண்டகம்" "திருநெடுத்தாண்டகம்" என்னும் இருநிலைத் தாண்டகங்களை அருளிய பெருமை திருமங்கையாழ்வாருக்கே உரியது. ஒவ்வோரடியிலும் அறுசீரேனும், எண்சீரேனும் வகையாக அமைத்து இயற்றிய நான்கடிச் செய்யுளான் ஆடவரையும், கடவுளரையும் புகழ்வனவாகிய அவ்விரு திறத்து நூல்களும் தாண்டகம் எனப்படுகின்றன. அவற்றுள் அறுசீர் அடிப்பாக்களைப் பெற்று வருவது குறுந்தாண்டகம் என்றும், எண்சீர் அடிப்பாக்களைப் பெற்று வருவது நெடுந்தாண்டகம் என்றும் பன்னிருபாட்டியல் [54] இலக்கணம் வகுத்துள்ளது. அப்பர் தேவாரத்தில் எண்சீர் கொண்ட தாண்டகத்தையே காண முடிகின்றது. ஆனால் திருமங்கையாழ்வாரோ அறுசீர், எண்சீர் கொண்ட இருவகைத் தாண்டகங்களையும் அருளியுள்ளனர். அறுசீர் அமைந்த இருபது பாடல்களடங்கியது திருக்குறுந்தாண்டகம் என்றும், எண்சீரமைந்த முப்பது பாடல்கள் அடங்கியதனைத் திருநெடுந்தாண்டகம் என்றும் வழங்கப்பெறுகின்றன. இவற்றை முறையே அறுசீர்க்கழில் நெடில் ஆசிரிய விருத்தங்கள், எண்சீர்க்கழில் நெடில் ஆசிரிய விருத்தங்கள் என அவற்றின் யாப்பமைதி கொண்டு குறிப்பிடலாம். ஆனால் எம்பெருமானுடைய அருளினால் திருமங்கையாழ்வாருடைய மனம் சம்சார துக்கத்தை மறந்து, அதைத்தாண்டி, அவனது அனுபவத்தில் ஆழ்ந்ததின் மேல் வந்த பிரபந்தமாகையாலே திருத்தாண்டகமாயிற்று

எனும் கருத்தை வைணவப் பெரியார் திரு. வீர்ராகவாசர்யர்[55] குறிப்பிடுவது கொண்டு தாண்டகத்தின் தனிச்சிறப்பை அறிய முடிகின்றது.

"திவ்வியப் பிரபந்தத்தில் நிதியினைப் பவளத்தூணை எனும் முதற்குறிப்புடைய பாடல் முதலாக இருபது பாடல்களையுடைய பனுவல் திருக்குறுந் தாண்டகம் என்பதாகும். இது தாண்டகமாகிய பாவினைப் போன்று இருபதின் மேற்பட்ட எழுத்துக்களையுடைய நெடிய அடிகளைப் பெறாது இருபது எழுத்துக்களுக்கு உட்பட்ட எழுத்துக்களால் இயன்ற அடிகளையுடையதாய்த் தாண்டகம் போலச் சுத்தாங்கமாகப் பாடுதற்குரியதாய்த் தாண்டகப் பாவிற் குறுகிவரும் பாவினால் இயன்றதாதலின் திருக்குறுந்தாண்டகம் என வழங்கப்பெறுவதாயிற்று" என திரு.க.வெள்ளைவாரணன் [56] அவர்கள் குறிப்பிடுகின்றார். எனவே குறுந்தாண்டகம்–நெடுந்தாண்டகம் என்பன முறையே பாவகையான் எழுத்து, சீர், பாடல் முதலியவற்றின் எண்ணிக்கை மிகுதி – குறைவு பற்றியதென்பதும், பொருள் சீர்மையான் தாண்டகம் என்பது உலகியலைத் தாண்டி இறைவனது அனுபவத்தில் ஆழ்ந்து திளைத்தோர் இறைபாரமாகப் பாடப் பெறுவது எனக் கொள்ளலாம்.

பெரிய திருமொழியிலே நாராயண மந்திரத்தில் நிலையுற்று திவ்விய தேசங்கள் சென்று அர்ச்சைகளை அனுபவித்து விபவானுபவத்திலுமிழிந்து, தமக்கு சம்சார கிலேசம் சகிக்க மாட்டாதபடி வளர்ந்ததை "ஆற்றங்கரை வாழ் மரம் போலே" என்றாற் போன்ற பல உவமைகளயிட்டு விளக்கி வருந்திய போது, எம்பெருமான் இவருடைய அவாவை வளர்ப்பதற்காக வாளா இருக்க, அது பொறுக்க மாட்டாதபடியாகவே, குன்றமெடுத்தவனாகையாலே தம் விடாய் தீர அவனே உபாய்ம் ஆவான் என்று தோன்றியபடி முக்கரணங்களாலும் அனுபவிக்கிறார் என்பது திருக்குறுந்தாண்டகத்தின் உட்பொருள் என்பர்.[57] திருக்குறுந்தாண்டகத்தின் கடைப் பாசுரங்கள் இரண்டின்

விரிவாகும் திருநெடுந்தாண்டகம் என்பது வைணவப் பெரியார் திரு. வீரராகவாசார்யர் [58] குறிப்பிடுவர். இதனால் இவ்விரு பிரபந்தங்களும் வைணவ சமயத்துறையில் கொள்ளப்பெறும் உயரிய நிலையினை உணர முடிகின்றது.

## திருவெழுக்கூற்றிருக்கை

திருமங்கையாழ்வார் அருளிச் செயல்களுள் நான்காவது பிரபந்தமாகவும், இயற்பாவில் எட்டாவது பிரபந்தமாகவும் திகழ்வது திருவெழுக்கூற்றிருக்கை. எழுகூற்றிருக்கை என்பது ஏழு கூறுகள் முறையாக அமையும்படி செய்யப்பெறும் சித்திரக்கவி வகையின் பாற்படும் மிக முயன்று செய்கின்ற கவியாதலின் "மிறைக்கவி" என்றும் கூறப்பெறும். ஒன்று என்னும் எண்ணுப்பெயரில் தொடங்கி, ஒவ்வொன்றாகப் படிப்படியாக ஏறியும், பின்னர் இறங்கி ஒன்றுவரை குறைந்தும், இவ்வாறு ஒன்றுமுதல் ஏழு வரையில் எண்ணுப்பெயர்கள் அமையுமாறு பாடப்பெறும் செய்யுள் வகையாகும். இதனை ஏழு அறையாக்கி முறையானே குறுமக்கள் (சிறார்கள்) முன்னின்றும், புக்கும் போந்தும் விளையாடும் ( அறைகீறி விளையாடும் கிளித்தட்டு என்னும் ஆட்டத்தைப் போல) பெற்றியான் வழுவாமை, ஒன்று முதலாக ஏழிறுதியாக முறையானே பாடுவது என்றும் இப்பாடல் ஆசிரியப்பாவினாலமையும் என்பதை யாப்பருங்கலவிருத்தி [59] உரையால் அறியப்படுகின்றது. இவ்வியல்பே எழுகூற்றிருக்கைப் பாடல்களில் காணப்படுகிறது. எழுகூற்றிருக்கை இரதபந்த அமைப்புக்குரியது என்றும் தெரிகிறது.

முதல் எழுகூற்றிருக்கை இலக்கியம் திருஞானசம்பந்தர் பாடியது. இதுமுதலாம் சைவத் திருமுறையில் இடம் பெற்றுள்ளது. அடுத்துத் தோன்றியது திருமங்கையாழ்வார் பாடிய திருமால் பாரமான பாடல். இவற்றின் பின்வந்தது பதினோராம் திருமுறையில் காணப்படுகின்ற நக்கீரத்தேவர் பாடிய திருவெழுக்கூற்றிருக்கை

இதையடுத்த காலத்தில் தோன்றியது அருகதேவனைப் பரவுகின்ற திருவெழுகூற்றிருக்கை. இத யாப்பருங்கல விருத்தியில் உதாரணப் பாடலாகக் காட்டப்பட்டுள்ளது. இதன் ஆசிரியர் பெயர் சொல்லப்படவில்லை. பின்னர் 15-ம் நூற்றாண்டில் அருணகிரிநாதர் முருகன் துதியாக ஓர் எழுகூற்றிருக்கை பாடினர். 16-ம் நூற்றாண்டில் மாறனலங்கார உரையாசிரியர் தாமே ஓர் எழுகூற்றிருக்கை பாடி உதாரணங்காட்டி இருக்கிறார். இவ்வாறுமே இன்று நாம் அறிந்த இவ்வகைப் பிரபந்தங்கள், ஆசிரியருடைய மனவிரிவுக்குத் தக்கபடி இப்பாடல்கள் விரிந்தும், சுருங்கியும் செல்லும். விரிந்து செல்வது எளிது. சுருங்கிச் சொல்வது அரிது. திருவெழுகூற்றிருக்கைப் பிரபந்தங்களின் வரலாற்றைக் கூறவந்த ஆசிரியர் மு.அருணாசலம் அவர்கள் [60] மேற்குறித்தவற்றால் திருஞானசம்பந்தர் பாடிய எழுகூற்றிருக்கையே முதலில் தோன்றியதென்றும், அதையடுத்துத் தோன்றியது திருமால் பாரமாகத் திருமங்கையாழ்வார் அருளிய திருவெழுக்கூற்றிருக்கை என்பதும் புலனாகும். சம்பந்தரது எழுகூற்றிருக்கை நாற்பத்து ஏழு அடிகளைக் கொண்டது. ஆனால் திருமங்கையாழ்வாரருளிய திருவெழுகூற்றிருக்கை நாற்பத்தாறு அடிகளை மட்டும் கொண்டுள்ளது.

"ஒருபேருந்தி" என்று தொடங்கி "அயனை ஈன்றனை" வாளியின் அட்டனை, மூவுலகளந்தனை, அரந்தையைத் தீர்த்தனை, ஏழுலகு எயிற்றனால் கொண்டனை, அறுசுவைப் பயனுமாயினை, ஐம்படை அங்கையுள் செற்றனை, அறிதுயிலமர்ந்தனை, வருணமும் ஆயினை, பூதமும் நீயே, ஏழ்விடை செற்றனை, அறிவருநிலையினை, ஐம்பால் ஓதியை ஆகத்திருத்தினை, அறமுதல் . . . . . . விரிந்து நின்றனை என்பனவற்றின் சீர்மையைப் பெரியவாச்சா பிள்ளை வியாக்கானத்தில் காணப்படும் செய்திகள் வருமாறு.[61]

"சேதனைப் பெற அநாதி காலமாகப் பலவிதமாக ருஷி செய்து வரும் பக்கலிலேயே உபாய பாவம் பரிபூரணமாய் இருப்பதையும்,

தன்கையில் ஏதுமில்லாத திருப்பதையும் காட்டி "மற்றோவினையே" என்று நிர்ஹேதுக கிருபையாலே அவனே ஸம்ஸார ஸம்பந்தத்தை அறுத்துத் தர வேணும் என்பதை உணர்த்தி "அடியினைப் பணிவன்" என்று அவன் திருவடிகளையே அதற்கு உபாயமாக உறுதி கொள்ளுவதை விளக்கும் இப்பிரபந்தம் உபாய ஸ்வரூபத்தைத் தெளிவுபடுத்துவது போலே வேறு எப்பிரபந்தமும் தெளிவுபடுத்தவில்லையன்றோ. இப்பிரபந்தத்தின் அர்த்தத்தின் சீர்மையாகும். இவ்வாறு இவ்வாசிரியர் குறிப்பிடுவதால் எம்பெருமானுடைய திருவடிகளில் அவன் உகப்புக்காகவே செய்யப்படும் தொண்டே மேன்மையானது என்பதும், அம்மேன்மையை அடைவதற்கு நம்மிடம் எதுவும் இல்லை. பொங்கியெழும் காரணமற்ற பெருங்கருணையுடைய திருமால் ஒருவனே உபாயம் ஆவான் என்பதும் புலனாகும். இதனால் வைணவ சமயத் திருநூல்களில் திருவெழுகூற்றிருக்கை அச்சமயத்தோரால் போற்றப்படும் பெற்றியை நம்மால் உணர முடிகின்றது.

## திருமடல்கள்

சங்க காலத்தில் சிறப்புற்றிருந்த இயற்கை நெறியின் ஒரு கூறான உலகவியல் காதல், பக்திப் போர்வையிலே ஆழ்வார்கள் காலமான பக்தி இயக்கக் காலத்தே மீண்டும் தலைகாட்டியது எனலாம். புலவர்கள் தங்கள் இதயங்களைத் திறந்து, இயல்பாக எழும் காதல் உணர்ச்சிகளை கடவுள் பேரில் வெளியிடுகின்றனர். பிருந்தாவனத்திலே கண்ணபிரான் கோபிகைகளுடன் செய்த லீலைகள், ஆழ்வார்கள் பக்திக் காதலைப் பாடும் போது, அடிப்படையாக அமைந்து அப்பாடல்களுக்கு இயற்கைத் தன்மை அளிக்கின்றன என்ற அறிஞர் அ. வேலுப்பிள்ளையவர்களது[62] கருத்தாகும். பக்தி நெறிப்பாடல் அகப்பொருள் நெறியை மேற்கொண்டதனை, இந்திரியங்களில் துணையின்றி அறிவின் துணையொன்றே கொண்டு சிற்றின்பத்தைப் *பேரின்பமாக மாற்றவல்ல ஒரு பரிணாம

வித்தையென்றும், சமய அறிஞர்களும் இதனைக் கைவந்த கருவியாக ஆண்டு வந்தாலும் தமிழகக் கவிஞர்கள் இதனைக் கையாண்டிருப்பது ஒர தனி அலாதி. அது ஒரு இலக்கிய உத்தி, இத்தகைய உயர்ந்த உத்தி, பக்திக்கு இடையூறு ஆகாது என தெளிவுபடுத்துகின்றார் அறிஞர் ந.சுப்புரெட்டியார் (63) அவர்கள் புலன்கள் நேராக ஒரு பொருளை நுகராத சமயத்திலும் அந்தப் பொருளை நினைவிற்கும் கொண்டு வந்து நுகர்ச்சியை ஏற்றவல்ல ஆற்றலாக அமைவதைக் கற்பனை எனக் கொள்ளலாம். அவ்வாறே உலகியல் நெறியில் தலைவன் தலைவியர் அகவாழ்க்கை நெறியை நினைவிற்கொண்டு அருள்வாழ்விலும் உயிரைத் தலைவியாகவும் பரம்பொருளைத் தலைவனாகவும் பாவித்துப் பாடியவை உள்ளன.

## திருமடல்கள் (தொடர்ச்சி)

இவ்வாறு அருளியல் துறையில் ஆன்மாவைத் தலைவியாகவும் இறைவனைத் தலைவனாகவும், கொள்வதனை வைணவ சமயத்துறையில் நாயகி–நாயகன் பாவம் எனப்படும்.

நாயகன், நாயகி என்பன வடசொற்கள். இச்சொற்களுக்கு நேரிடையாகத் தமிழ்சொற்களுண்டு. தலைவன், தலைவி என்ற சொற்கள் உலகியற்காதலரை உணர்த்தற்குத் தமிழ் மொழியில் வழங்கிவந்தவை. நாயகன்–நாயகி என்ற சொற்கள் தெய்வீகக் காதலரை உணர்த்துவதற்கு ஏற்பட்டனவாகக் கொள்ளலாம். "பாவம்" வடமொழிச் சொல்லாகும். அது பாவனை செய்தலை உணர்த்துவதாக உள்ளது. ஆதலின் இறைவன் ஆன்மா எனும் இவ்விரண்டினையும் நாயகன்–நாயகியாகப் பாவனைச் செய்யப்படுதலையே உணர்த்துவதாகக் கொண்டால் தவறாகாது. நாயகன்–நாயகி பாவம் பாலுணர்வை அடிப்படையாகக் கொண்டது. மேலும், பாலுணர்வே, தலைவன் தலைவி உணர்வை ஏற்படுத்துவது என்பது உலகறிந்த உண்மை. உலக வாழ்க்கையில் அமைந்துள்ள உறவு முறைகள்

பலவற்றுள்ளும் தலைமையாகத் திகழ்வது தலைவன்–தலைவி உறவு முறையாகும். இறைவன்–ஆன்மா என்பனவற்றிற்கு இடையிலான தெய்வீக உறவு நாயகன்–நாயகி பாவம் என்ற தொடர் உணர்த்துவதாகக் கொள்வது பொருத்தமாகத் தோன்றுகிறது. ஆனால் நாயகன் – நாயகி பாவம் தமிழ் அகப்பொருள் இலக்கிய மரபிலிருந்து சில அம்சங்களில் வேறுபடுகிறது. சங்ககால அகப்பொருள் மரபிலே தலைவன் பெயரை வெளிப்படையாகவோ குறிப்பாகவோ சுட்டக்கூடாது. அவ்வாறு சுட்டினால் அது அகப்பொருள் மரபினின்றும் பிறழ்ந்தாகக் கொண்டு அதனைப் புறப்பொருள் பற்றியதாகக் கொள்வதே மரபு என்பதற்குப் பத்துப் பாட்டில் ஒன்றான "நெடுநல்வாடையை" எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம். ஆனால் நாயகன்–நாயகி பாவம் அமைந்துள்ள ஆழ்வார்களின் அருட்பாடல்கள் யாவும் திருமால் பெயரைச் சுட்டி அவனது பெருமை பேசுவனவாக அமைந்துள்ளன. இவைப் பக்திப்பாடல்கள் – அகஞ்சார் அருட்பாடல்கள் ஆதலின் உலகியல் வறையறையினின்றும் வேறுபட்டும் மாறுபட்டும் திகழ்வதனை இவற்றிற்குரிய சிறப்பு அம்சமாகவும் மரபாகவும் கருதலாம். திருமங்கையாழ்வார் பராங்குசநாயகி என்று வைணவர்களால் சிறப்பிக்கப்படுபவர். உலகியற் காதலில் ஏற்படும் ஆற்றாமையைத் தம் சொந்த வாழ்க்கையிலே நன்கு உணர்ந்தவர். நாயகன்–நாயகி பாவத்தில் அமைந்த அவரது பாடல்கள் யாவற்றுக்கும் சிகரம் வைத்தது போல் அமைந்தவை இவரது பெரிய திருமடல், சிறிய திருமடல் என்னும் பிரபந்தங்களாகும்.

சிறந்த ஆடவர் ஒருவர் தனிஇடத்து ஒருத்தியைக் கண்டபிறகு அவள்பாற் கொண்ட காதல் தம்மை வருத்தலான், அறமும், பொருளும் வீடுமாகிய இவற்றின் தன்மையைப் பெரிதும் இழித்துக்கூறி, சிறந்ததாகிய – ஒத்த அன்பினால் எய்துதற்குரிய இன்பத்தின் தன்மையைப் புகழ்ந்துரைத்து, அந்த ஒள்ளிய வளையையணிந்த நங்கையைப் புகழ்ந்து, அவளது வடிவை ஒருபடத்தால் எழுதிக்

கரும்பனையாற் செய்யப்பட்ட குதிரையின் மீது ஏறுவர்; அங்ஙனம் மடல் ஏறுதலைத்தனிச் சொல் நீக்கிப் பாட்டுடைத் தலைவனது இயற்பெயருக்கு அடிதோறும் எதுகையினை அமைக்கப் பெற்ற கலிவெண்பாவின் கண்ணதாகும்படி வைத்துப் பாடக்கடவர் என இலக்கணம் [64] உள்ளது. இதனால் மடலூர்தல் என்பதுதான் காதலித்த பெண்ணை அடையப் பெறாவிடத்து அப்பெண்ணைக் காதலித்த ஆடவன் மேற்கொள்ளும் தற்கொலை முறைகளுள் ஒன்றாகக் கருதலாம். இவ்வாறு மடலூர்தல் என்பது ஆடவர் மட்டும் செய்வதற்கு உரியதேயன்றிப் பெண்டிர் எந்நிலையிலும் செய்யத்தக்கதல்ல என்பதனை "கடலன்ன காமமுழந்தும் மடலேறாப்பெண்ணிற் பெருந்தக்கதில்" [65] என்று திருவள்ளுவர் தெளிவுபடுத்துகின்றார். இயற்பாத் தொகுதியில் முறையே ஒன்பதாவது, பத்தாவது பிரபந்தங்களாகத் திகழ்வன, திருமங்கையாழ்வார் அருளிய, சிறிய திருமடல், பெரிய திருமடல்களாகும். இவ்விரு திருமடல்களிலும், திருமங்கையாழ்வார் தம்மை நாயகியாகக் கொண்டு "அன்ன நடையார் அலரேச ஆடவர்மேல் மன்னும் மடலூரார் என்பதோர் வாசகமும், தென்னுரையில் கேட்டறிவதுண்டு அதனையாம் தெளியோம்" [66] என்று இவ்வாழ்வாரே குறிப்பிடுவதால், இது பழைய மரபுக்கு மாறானது என்பதுடன், அகஞ்சார் அருட்பாடல் துறையிலும் புதியதோர் மரபினைப் படைத்தவரும் இவரே, என்பது புலனாகிறது. பின்னர் பன்னிருபாட்டியல் "மடன்மாப் பெண்டிர் ஏறார் ஏறுவர் கடவுளர் தலைவராய் வருங்காலே" [67] என இதற்கு இலக்கணம் வகுத்து, ஊரார் இகழினும் "ஊராதொழியென் நான், வாரார் பூம் பெண்ணை மடல்" [65] என்று சிறிய திருமடலில் இவ்வாழ்வார் குறிப்பிடுவதால், ஆசைவெள்ளம் கரைக்கடங்காப் பெருவெள்ளம் போல் பெருகிவரும் போது அது ஊரார் இகழ்வதையும் பொருட்படுத்தாது; நூல்வரம்புகளையும் தகர்த்து எறிந்துவிடும் என்ற உண்மை புலனாகின்றது. சிறிய திருமடல் எழுபத்தேழு கண்ணிகளைக்

கொண்டது. இஃது ஆழ்வார் தாமான தன்மையிலேயிருந்து பேசுகின்ற பிரபந்தம் அன்று. கிருஷ்ணாவதாரத்தில் குடக்கூத்திலே அகப்பட்டு அவனை அடையப் பெறாது வருந்தி, மடல் எடுக்கத் துணிந்த ஒரு பிராட்டியின் தன்மையை ஏறிட்டுக் கொண்டு அவருடைய பாசுரத்தாலே தனது தசையை வெளியிடும் பிரபந்தமே சிறிய திருமடல் என்று திரு. அண்ணங்கராசாரியர் (69) குறிப்பிடுவர். நூற்றி நாற்பத்தெட்டு கண்ணிகளைக் கொண்ட பெரிய திருமடல் அர்ச்சா மூர்த்தியான திருநாறையூர் நம்பி விஷயமாக அருளிச் செய்யப்பெற்றது. சிறிய திருமடலிலே இவ்வாழ்வார் கண்ணன் விஷயமாக மடலூரத் துணிந்தார். அவன் காலாந்திரத்தில் இருந்தவனாய் தானும் ஒக்க மடல் எடுக்கக் கூடிய சுனை கேடனாகையாலே, அது பலிக்கவில்லையென்று கொண்டு, நீர்மையின் எல்லை நிலமாகத் தம் காலத்திலேயே விளங்கிய அர்ச்சாவதார விஷயமாகப் பெரிய திருமடலிலே மடலெடுக்கத்துணிந்தார் என்பர். (70) இவ்விரு மடல்களிலும், மானிடர் மங்கையர் மீது கொள்ளும் காமத்தினின்றும் வேறுபட்டது என்பதும் திருமங்கையாழ்வார் திருமால்மீது கொள்ளும் பேரின்பம் பற்றியது என்பதும் புலனாகும். இக்காரணம் பற்றியே இதனை "பகவத் விஷயகாமம்" என வைணவ உலகம் சிறப்பித்துக் கூறுகின்றது.

இறைவனால் ஆட்கொள்ளப்படவேண்டும் என எண்ணும் இவர் அவனையே நினைந்து நினைந்து ஏங்குகின்றனர்; ஆற்றாமையால் வருந்துகின்றான்; அருளியல் வாழ்விலமையும் இத்தகைய அனுபவங்களைக் காட்டுவதற்கு அகப்பொருள் துறைகளைப் பயன்படுத்தியுள்ளார்: அருளியல் அனுபவங்கள் அனைத்தும் உலகோர்க்கு எளிதில் விளங்கவேண்டும் என்பதற்காக அகவியல் அனுபவங்களை அருளியல் அனுபவங்களோடு குழைத்துப் பாடியுள்ளனர் எனலாம்.

## (2.3 பாசுரச் சிறப்பு தொடர்ச்சி)

மேலும் உள்ளப்பாங்கினையும், உள்ளவளர்ச்சியினையும் பேரின்பப் பெருநிலை அடையும் திறத்தையும் முற்றுறக்காட்ட முனைவதனை நாயகியின் நிலையினின்று திருமடல்களில் வெளிப்படுத்தியருளினார் எனக் கருதலாம். திருநாகை சவுந்திரராசனின் அழகில் ஈடுபட்டும் பராங்குச நாயகி நிலையில் நின்று இவ்வாழ்வார் பெரிய திருமொழி [71] யில் பேசுகின்ற நிலையிலும் இதனை காண முடிகின்றது. அகப்பொருள் இலக்கியங்களில் உள்ளுறை உவமத்தினைப் பயன்படுத்திப் பாடலில் நுட்பமும் நயமும் சேர்த்தனர் பழந்தமிழ்ப் புலவர்கள். பாடலில் மேற்போக்காகக் காணும் பொருளைக்கொண்டு, வேறு உட்பொருளை கூறுவதனை வைணவ உரையாசிரியர்கள் "சுவாப தேசம்" என்று கூறுவர். இதனைப் பாசுரத்தின் உள்ளுரைப் பொருள் எனலாம். நாயகி நாயகன் பாவமாகப் பக்திக்காதலை வெளியிடும் பாசுரங்கட்குத் தத்துவார்த்தமான வியாக்கியானகாரர்கள் சுவாப தேசப் பொருள் தருகின்றனர். அகத்துறை பிரபந்தங்களான திருமடல்களில் உள்ளுறை அமைத்துத் தத்துவப் பொருளை அருளியுள்ளார் என்பதனை வியாக்கியானங்களால் அறியமுடிகின்றது.

## நூலும் நூற்பயனும்

திருமங்கையாழ்வார் இலக்கியம் என்னும் பொருளிலும் செய்யுள் என்னும் பல்வேறு சொற்களை வழங்கியுள்ளார். அவற்றுள் "செஞ்சொல் மாலை [72] தெய்வநன்மாலை,[73] நல்லிசை மாலை, [74] தமிழ்மாலை,[75] நூல் உரை செய்த சொல்திறம்,[76] பாடல்,[77] பனுவல்[78] பரவு தண்டமிழ் [79]; ஒண்டமிழ் [80]; தமிழ் [81]; இன்தமிழ் நன்மணிக் கோவை [82] ; போன்றவற்றைக் குறிப்பிடலாம். தமிழின்பால் எத்துணை அளவு ஈடுபாடுடையவர் என்பதனை இவ்வாழ்வார் "தமிழ்" எனும் சொல்லுக்கு அவர் தந்துள்ள அடைமொழிகளாலறியலாம்.

பண்டைத் தமிழறிஞர் "அறம்பொருள் இன்பம் வீடடைதல் நூற்பயனே" (83) என்று இலக்கியத்தின் இலக்கினை எடுத்துரைத்தனர்.

பாசுரத்தினைக் கற்றால் விளையும் பயன் இன்னதென ஆழ்வார்தம் வாக்கே உணர்த்துகிறது. திருமங்கையாழ்வார் தம் திருப்பதிகங்களின் முடிவுகளில் – பதிகத்தின் திருக்கடைகாப்புத்தோறும் அவற்றைக் கற்பதால் மக்களடையும் பயன் இன்னவென்று கூறுவது இங்கு உளங்கொளற்குரியது.

"பழவினையை முதலரிய வல்லார்தாமே" (84)

"தீவினையை முதலரிய வல்லார்தாமே" (85)

"அரிய இன்னிசை பாடும் நல்லடியார்க்கு அருவினை அடையாவே" (86)

"நாளும் பழவினை பற்றறுப்பார்" (87)

"கலியன் சொன்னமாலை வல்லாரவர் வானவராகுவர்தாமே" (88)

"ஏத்தவல்லார்க்கு இடம் வைகுந்தமே" (89)

"காரந்தெங்கும் பரந்தானைக் காண்பர்தாமே" (90)

"கருங்கடல் உலகம் ஆண்டு வெண்குடைக்கீழ் இமையவர் ஆகுவர் தாமே" (91)

"வங்கமாகடல் வையம் காவலராகி வானுலகாள்வாரே" (92)

"முடிகொண்டு முடிமன்னர் தம் முதல்வர் முதலாவரே" (93)

"தேர்மன்னராய் நலிமாகடல் சூழ்செழுநீருலகாண்டு திகழ்வர்களே (94)

என்னும் கூற்றுகளால் வீடுபேறடைதல்; வினைகள் தீர்ந்து இன்ப நிலை எய்துதல்; திருமாலின் திருவருட்காட்சிபெறல் என்பது புலனாகின்றது. அரசுச்செல்வத்தையும் அடுத்தடுத்து மொழிவதால் திருமாலுக்கு அடிமைசெய்வார், அவனது அமிசமான திருவுடைய மன்னராகத் தடையில்லை என்பது இவரது கருத்து எனலாயிற்று.

தம்மைப் பயில்வாரைப் போற்றிக் காப்பதாகக் கருதப்பெறுவது மந்திரம். நிறைமொழி மாந்தரும் அருளாசிரியருமான திருமங்கையாழ்வார் திருவாய் மலர்ந்தருளிய பாசுரங்கள் நன்மை பெருகுவதற்கும் தீமை நீங்குவதற்கும் வேண்டிய மறைமொழிகளாய் தமிழ் மந்திரங்கள் என்பதற்குத் தடையில்லை. ஆதலின் இவர்தம் பாசுரங்களைப் பாடி வழிபடும் இயல்புடையோர் இவ்வுலகில் எல்லாத்துன்பங்களும் நீங்கி அரசுச் செல்வமும் பெற்று இனிதுவாழ்வர்: மறுமையில் திருமாலின் திருவருட் பயனான பேரின்பமும் பெற்றுய்யலாம் என்பன உறுதிப்படுகின்றன. மேலும் திருமங்கையாழ்வாரின் பாசுரங்கள் பரம்: வியூகம்: விபம்: அந்தர்யாமித்துவம் என்னும் திருமாலின் நிலைகளைப் பற்றிப் பேசியிருப்பினும் அர்ச்சைத் திருமேனியின் அனுபவத்தையே முக்கியமாகவும் சிறப்பாகவும் பேசுகின்றன. ஆதலின் இவற்றை அர்ச்சாவதார வேதம் எனக் கொள்ளலாம்.

நாராயணனே இலட்சியமாக மட்டும் அல்லாது அந்த இலட்சியத்தை அடைவதற்குக் கருவியாகவும் இருக்கிறான். பலனை அருள்பவனும், அருள்பாலிப்பவனும் ஆகிய அவனது பெருங்கருணைத் தேக்கமே–நிரந்தரமான அவதாரமே அர்ச்சைத் திருமேனிகள். ஆதலின், கோவில் கொண்டு எழுந்தருளியுள்ள திருமாலின் திருமேனியழகினைக் கண்டும்: அவனது புகழைக் கேட்டும் அவனது திருநாமத்தை உச்சரித்தும் அவற்றால் பெறுகின்ற இன்பத்தை யனுபவித்துக் கொண்டிருப்பதே சலனமற்ற இறை ஈடுபாட்டுக்கு வழி வகுக்கின்றது. சலனமற்ற இறை ஈடுபாட்டால் ஆன்மா இறைவனோடு ஒன்றிவிடுகிறது. இதற்குரிய இராச பாதையாகத் திகழ்வது பக்தியே, ஆதலின் பக்திநெறி திருமாலையே தலைசிறந்த உள்பொருளாகவும் உயர்பொருளாகவும் கொண்டு திகழும் தத்துவக் கருத்துக்கள்; வழிபாட்டு நெறிமுறைகள்; பலமரபுக் கதைகள் ஆகியவை இவ்வாழ்வாரது பாசுரங்களில் திகழும் சீர்மைகொண்டு வைணவ சமய நெறிமுறைகளைறியலாம்.

முடிவுரை

இதுகாறும் கண்ட விவரங்களிலிருந்து கீழ்வரும் உண்மைகள் புலனாகின்றன.

1) திருமாலைப் பரவும் பரம்பரையில் தோன்றிய திருமங்கையாழ்வாரும் திருமாலடிமைத் திறத்தில் முனைந்து நின்றவர். ஆலிநாடு; திருமங்கை; குறையல் என்ற பகுதிகளுக்குத் தலைவராகவும், சோழமன்னனதுதானைத் தலைவருள் ஒருவராகவும் விளங்கிய பெரும் வீரர், மனைவி, மக்கள் பலருடையவர். உலக இன்பங்களில் திளைத்து நின்றவர்.

2) பொய்ம் மொழியொன்றில்லாத மெய்ம்மொழியாளர்; பரந்த நூலறிவும், தமிழ்ப் பெரும் புலமையும், கவிபாடும் திறமையும் உடையவர். வரையாது வழங்கும் வள்ளன்மையும் அதனால் புலவர் போற்றும் புகழுடன் வாழ்ந்தவர்.

3) மறந்தும் புறந்தோழா மாண்புடைய இவர் திருமால் பக்தியில் சிறந்து விளங்கிய குமுதவல்லியாரைமணந்தவர். திருமாலடியார்களை ஆராதித்தல் போன்ற சமயவாழ்க்கைக்கு அவ்வம்மையார் இவருக்கு உறுதுணையாயக நின்றவர்.

4) திருமால் தானேதன்னைக் காட்டக் கண்டு, அப்பெருமானாரிடம் மந்திரோபதேசம் பெற்றவர் – திருமால் திருவருளைச் சிக்கெனப் பெற்றபின் மனைவி மக்களை முற்றும் துறந்து திருமாலடியார் எனத் தேசமறியத் திரிந்து திருமால் திருப்பதிகள் பலவும் சென்று மங்களாசாசனம் செய்தவர். திருவரங்கப் பெருங்கோவில் திருமதில் திருப்பணி புரிந்தவர்; நீண்ட காலம் வாழ்ந்த அவர் இறுதியில் திருக்குறுங்குடியில் தன்னடிச் சோதிக்கு எழுந்தருளார்.

5) களவுத் தொழிலில் மூண்டு நின்றவர்; நாகபட்டினத்துப் புத்தவிகாரத்திருந்த பொற்சிலையைக் களவாடியவர்; திருஞானசம்பந்தரால் பெருமைப்படுத்தப் பெற்றவர் என்பன புனைந்துரைகள். கி.பி.எட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதிக்கும் ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதிக்கும் இடையில் வாழ்ந்தவர்.

6) தெரிந்தோ தெரியாமலோ நாள்தோறும் எத்தனையோ பாவங்களைச் செய்து கொண்டிருக்கும் மக்களுக்கு "திருமாலின் பொங்கும் பரிவுக்கும் உரியவரானால் உய்யலாம்" என்பதனை இவரது வாழ்க்கை கற்பிப்பதுடன் திருமாலின் மேன்மை, எளிவந்ததன்மை, ஆட்கொள்ளும் அருள்திறம் போன்றவற்றையும் அறிவிக்கின்றது.

7) உறங்கிக் கிடந்த தமிழனத்தைத் தட்டி எழுப்பி அவர்தம் சமயவாழ்விற்கும் புத்துணர்ச்சி ஊட்டியவர். திருமால் பக்திப் பாசுறைக்கும் தமிழ் இலக்கியத்திற்கும் தமிழகம் நீண்டகாலம் தவம் கிடந்துபெற்ற தளபதியே திருமங்கையாழ்வார் என்பன இவரது வாழ்க்கை வரலாற்றுக்குறிப்பு உணர்த்துகின்ற உண்மைகளாகும்.

8) பெருந்தொகையாகத் திகழும் இவரது பாசுரங்கள் இசைப்பா, இயற்பா ஆகிய இருதொகுதிகளிலும் இடம் பெற்று நாலாயிரத்தின் நடுநாயக மாகவும், இரண்டாவது ஆயிரம் முழுமையாகவும் திகழும் சீர்மையன.

9) பல்வேறு பாட்டியல்களையும், தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கு வேண்டிய கூறுகளையும் கொண்டவை.

10) தமிழ் இலக்கியத்துறையில் காணும் அகத்துறைப்பாடல், சமயத்துறையில் திகழும் அகஞ்சார் அருள்துறைப் பாடல், ஆகியவற்றுள் புதியதோர் மரபைப் படைத்த சிறப்பு திருமடல்களுக்கே உரியன. மேலும், இரத பந்த அமைப்புடைய திருவெழுக் கூற்றிருக்கையும்; திருத்தாண்டகங்கள் இரண்டும் நாலாயிரத்துள் தண்ணொளி பரப்புவன.

11) சமயத்துறைக்கே பாசுரங்கள் உரியனவாயினும் இசைத்துறைக்கும், இலக்கியத் துறைக்கும் அவ்வத்துறையில் சிறந்து விளக்குவதுடன் இறையுணர்வில் விரைவில் ஈடுபடச் செய்யும் ஆற்றலும் கொண்டவை; நன்மை பெருகி, தீமை நீங்கி, இம்மை மறுமை ஆகிய இருமையின்பங்களையும் பயக்க வல்லமறை மொழிகளாய தமிழ் மந்திரங்களாகவும் இவரது பாசுரங்கள் விளங்குகின்றன.

12) வைணவ சமயத்திற்குத் தமிழ் மொழியில் கிடைத்த "அர்ச்சாவதார வேதம்" எனக்கொள்ளும் சிறப்புடன் திருமங்கையாழ்வாரது பாசுரங்கள் திகழ்கின்றன. மேலும் எண்வகை நலமும் அருளுவது எட்டெழுத்துத் திருமந்திரமாகிய நாராயண நாமம் என்பதை "குலம் தரும் செல்வம் தந்திடும். நலம் தரும் சொல்லை நான் கண்டு கொண்டேன்நாராயணா என்னும் நாமம்" என்பதை குலம் தரும் செல்வம் தந்திடும். . நலம் தரும் சொல்லை நான் கண்டு கொண்டேன் நாராயணா என்னும் நாமம் (பெரிய திருமொழி 1 : 956) என்பதால் அறிய முடிகின்றது.

"குலந்தருஞ் செல்வத் தந்திடும் – அடியார்
படுதுய ராயினவெல்லாம்,
நிலந்தரஞ் செய்யும் நீள்விசும் பருளும்
அருளொடு பெருநில மளிக்கும்,
வலந்தரும் மற்றுந் தந்திடும் பெற்ற
தாயினு மாயின செய்யும்
நலந்தருஞ் சொல்லை நான்கண்டு கொண்டேன்
நாராய ணாவென்னும் நாமம்".

*******

# திருமங்கையாழ்வார் வாழ்க்கைக் குறிப்பும் இவரது பாசுரச் சிறப்பும் அடிக்குறிப்பு (தொடர்ச்சி)

2-3

50) பெரிய. தி. மொ. 1 . 1 : 1
51) ஞானசுந்தரம். தெ வைணவ சமய உரையாசிரியர்கள் – இலக்கியக் கொள்கை. பக். 388–389.
52) பெரிய. தி.மொ. 1.. 1 : 1 –10: 6 . 10: 1 – 10
53) தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி. பக். 194
54) பன்னிருபாட்டியல் சூத். 196
55) வீரராகவாசார்யன்; திருக்குறுந்தாண்டகம் – ப்ரபந்தரக்ஷை – பக்.1.
56) பன்னிரு திருமுறை வரலாறு – (முதற்பகுதி) பக்.423.
57) வீரராகவாசார்யன் – திருக்குறுந்தாண்டகம் – ப்ரபந்தரக்ஷை – பக்.1.
58) ஷை – திருநெடுந்தாண்டகம் – ஷை – பக்.20.
59) யாப்பரு. விருத்தி சூத்.96: உரை.பக்.525–526.
60) அருணாச்சலம். மு: தமிழ் இலக்கிய வரலாறு – 10ஆம் நூற்றாண்டு. பக்.314.
61) பெரியவாச்சான் பிள்ளையருளிய வியாக்கியானம் – திருவெழு கூற்றுக்கை – பக்.3 – 4.
62) வேலுப்பிள்ளை. ஆ: தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும். பக்.105.
63) சுப்புசெட்டியார். ந. டாக்டர் வைணவசமய நூல்கள் – தெய்வத்தமிழ் –பக் பக்.543–544.
64) பன்னிருபாட்டியல். சூத்.146.
65) திருக்குறள் – 1137.
66) பெரி. திருமட. கண்ணி. 38–39.
67) பன். பாட்டி. சூத்.147,

68) சிறிய திருமடல். கண்.77.

69) அண்ணங்கராசார்யார் – சிறிய. திரும – திவ்யார்த்ததீபிகை – முன். பக்.192.

| | | | |
|---|---|---|---|
| 70) ஷை | ஷை | ஷை. | பக்.192. |
| 71). ஷை | ஷை | ஷை. | பக்.192. |

## 2 - 3 அடிக்குறிப்பு

71) பெரிய. தி.மொ. 9 : 2 : 1 –9

72) ஷை 1 : 8 : 10

73) ஷை 1 . 1 : 10

74) ஷை 5 . 4 : 10

75) ஷை 7 . 5 : 10

76) ஷை 10 . 1 : 10

77) ஷை 2 . 5 : 10

78) ஷை 1 . 4 : 10; 9 . 8 : 10

79) ஷை 3 . 1 : 10

80) ஷை 3 . 3 : 10

81) ஷை 4 . 1 : 10

82) ஷை 7 . 7 : 10

83) நன்னூல் சூத். 10

84) திரு.நெ. தாண்.30

85) பெரிய. தி.மொ. 2 . 5 : 10

86) ஷை 1 . 2 : 10

87) ஷை 2 . 8 : 10

88) ஷை 1 . 1 : 10

89) ஷை 2 . 8 : 10

90) ஷை 2 . 10 : 10

91) ஷை 1 . 4 : 10

92) ஷை 1 . 8 : 10

93) ஷை 2 . 6 : 10

94) ஷை 2 . 9 : 10

# பின்னிணைப்பு -I

## ஆழ்வார்களின் எண்ணிக்கையும் வரிசையும்

| (1) திருவரங்கத்த முதனூர் முறை | (2) பராசர பட்டர் முறை |
|---|---|
| 1. பொய்கையாழ்வார் | 1. பூதத்தாழ்வார் |
| 2. பூதத்தாழ்வார் | 2. பொய்கையாழ்வார் |
| 3. பேயாழ்வார் | 3. பேயாழ்வார் |
| 4. திருப்பாணாழ்வார் | 4. பெரியாழ்வார் |
| 5. திருமழிசையாழ்வார் | 5. திருமழிசையாழ்வார் |
| 6. தொண்டரப்பொடியாழ்வார் | 6. குலசேகராழ்வார் |
| 7. குலசேகராழ்வார் | 7. திருப்பாணாழ்வார் |
| 8. பெரியாழ்வார் | 8. தொண்டர்டிப்பொடியாழ்வார் |
| 9. ஆண்டாள் | 9. திருமங்கையாழ்வார் |
| 10. திருமங்கையாழ்வார் | 10. நம்மாழ்வார் |
| 11. நம்மாழ்வார் | |
| (பதினொரு ஆழ்வார்கள்) | (பத்து ஆழ்வார்கள்) |

| (3) பின்பழகிய ஜீயர் முறை | (4) வேதாந்ததேசிகர் அதிகார ஸங்க்ரஸ முறை |
|---|---|
| 1. பொய்கையாழ்வார் | 1. பொய்கையாழ்வார் |
| 2. பூதத்தாழ்வார் | 2. பூதத்தாழ்வார் |
| 3. பேயாழ்வார் | 3. பேயாழ்வார் |
| 4. திருமழிசையாழ்வார் | 4. நம்மாழ்வார் |
| 5. நம்மாழ்வார் | 5. பெரியாழ்வார் |
| 6. மதுரகவியாழ்வார் | 6. ஆண்டாள் (வியாக்) |
| 7. குலசேகராழ்வார் | 7. குலசேகராழ்வார் |
| 8. பெரியாழ்வார் | 8. திருப்பாணாழ்வார் |
| 9. ஆண்டாள் | 9. தொண்டரடிபபொடியாழ்வாரர் |
| 10. தொண்டரடிப்பொடியாழ்வார் | 10. திருமழிசையாழ்வார் |
| 11. திருப்பாணாழ்வார் | 11. திருமங்கையாழ்வார் |
| 12. திருமங்கையாழ்வார் | 12. மதுரகவியாழ்வார் |

| (5) வேதாந்ததேசிகர் ப்ரபந்தஸார முறை | (6) மணவாளமாமுனிகளது நியமன முறை |
|---|---|
| 1. பொய்கையாழ்வார் | 1. பூதத்தாழ்வார் |
| 2. பூதத்தாழ்வார் | 2. பேயாழ்வார் |
| 3. பேயாழ்வார் | 3. பொய்கையாழ்வார் |
| 4. திருமழிசையாழ்வார் | 4. நம்மாழ்வார் |
| 5. நம்மாழ்வார் | 5. திருமழிசையாழ்வார் |
| 6. மதுரகவியாழ்வார் | 6. பெரியாழ்வார் |
| 7. குலசேகராழ்வார் | 7. திருமங்கையாழ்வார் |
| 8. பெரியாழ்வார் | 8. குலசேகராழ்வார் |
| 9. ஆண்டாள் | 9. தொண்டரடிப் பொடியாழ்வார் |
| 10. தொண்டரடிப்பொடியாழ்வார் | 10. திருப்பாணாழ்வார் |
| 11. திருப்பாணாழ்வார் | 11. ஆண்டாள் |
| 12. திருமங்கையாழ்வார் | 12. மதுரகவியாழ்வார் |

(7) நாலாயிரப்பிரபந்த முறை

1. பெரியாழ்வார்
2. ஆண்டாள்
3. குலசேகராழ்வார்
4. திருமழிசையாழ்வார்
5. தொண்டரடிப்பொடியாழ்வார்
6. திருப்பாணாழ்வார்
7. மதுரகவியாழ்வார்
8. திருமங்கையாழ்வார்
9. பொய்கையாழ்வார்
10. பூதத்தாழ்வாழ்வார்
11. பேயாழ்வார்
12. நம்மாழ்வார்

தமிழ் வரலாறு (பிற்பாகம்–முற்பகுதி) கே.எஸ்.ஸ்ரீநிவாஸபிள்ளை; பக்.124.

(வெளியிட்டோர்: கே.எஸ். கலியாணசுந்தரம் பிள்ளை ஸூ சன்; சீனிவாசப் பிள்ளை ரோடு; தஞ்சை;

## பின்னிணைப்பு 2 (அ)
## நாலாயிரம் என்பதன் விவரம்

1. முதலாயிரம் : திருப்பல்லாண்டு முதல் கண்ணிநுண் சிறுத்தாம்பு இறுதியாவுள்ள 10 பிரபந்தங்களுக்குப் பாசுரங்கள் .......................... 947

2. பெரியதிருமொழி : திருக்குறுந்தாண்டகம்; திருநெடுந்தாண்டகம் உள்பட பாசுரங்கள் . . .1134

3. திருவாய்மொழி : " " . . . . . 1102

4. இயற்பா : முதல் திருவந்தாதி முதல் பெரிய திருமடல் இறுதியாகவுள்ள 10 பிரபந்தங்களுக்குப் பாசுரங்கள் . . . . . 593

ஆக . . . . . 3776

(நாலாயிரப்பிரபந்தம் ந. இரத்தின நாயகர் ஸன்ஸ், சென்னை (1959) பக்.6) (2.1)

## பன்னிரண்டு ஆழ்வார்கள் செய்தருளியுள்ள பிறபந்தங்களின் அட்டவணை

| ஆழ்வார்கள் | பிரபந்த எண்ணிக்கை | பிரபந்தங்களின் பெயர் | பாடல்களின் எண்ணிக்கை | |
|---|---|---|---|---|
| 1. பொய்கையாழ்வார் | 1 | முதல் திருவந்தாதி | 100 | |
| 2. பூதத்தாழ்வார் | 2 | இரண்டாம் திருவந்தாதி | 100 | |
| 3. பேயாழ்வார் | 3 | மூன்றாந் திருவந்தாதி | 100 | |
| 4. திருமழிசை யாழ்வார் | 4 | (1) திருச்சந்த விருத்தம் | 120 | |
| | 5 | (2) நான் முகன் திருவந்தாதி | 96 | 216 |
| 5. மதுரகவியாழ்வார் | 6 | கண்ணிநுணி சிறுத்தாம்பு | 11 | |
| 6. நம்மாழ்வார் | 7 | (1) திருவிருத்தம் | 100 | |
| | 8 | (2) திருவாசிரியம் | 7 | 1296 |
| | 9 | (3) பெரிய திருவந்தாதி | 87 | |
| | 10 | (4) திருவாய் மொழி | 1102 | |
| 7. குலசேகராழ்வார் | 11 | பெருமாள் திருமொழி | 105 | |
| 8. பெரியாழ்வார் | 12 | (1) திருப்பல்லாண்டு | 12 | |
| | 13 | (2) பெரியாழ்வார் திருமொழி | 461 | 473 |
| 9. ஆண்டாள் | 14 | (1) திருப்பாவை | 30 | |
| | 15 | (2) நாச்சியார் திருமொழி | 143 | 173 |
| 10. தொண்டரடிப் பொடியாழ்வார் | 16 | (1) திருமாலை | 45 | |
| | 17 | (2) திருப்பள்ளியெழுச்சி | 10 | 55 |

## பின் இணைப்பு (ஆ) தொடர்ச்சி

| | | | | |
|---|---|---|---|---|
| 11. திருப்பாணாழ்வார் | 18 | அமலனாதிபிரான் | 10 | |
| 12. திருமங்கையாழ்வார் | 19 | (1) பெரிய திருமொழி | 1084 | |
| | 20 | (2) திருக்குறுந்தாண்டகம் | 20 | 1361 |
| | 21 | (3) திருநெடுந்தாண்டகம் | 30 | |
| | 22 | (4) திருவெழுக்கூற்றிருக்கை | 1 | |
| | 23 | (5) சிறிய திருமடல் | 77½ | |
| | 24 | (6) பெரிய திருமடல் | 148½ | |

பிரபந்தங்கள் 24–க்கு பாடல்கள் – 4000

(நாலாயிரத்திவ்விய பிரபந்தம் திராவிடபுக்டெபோ 16– வெள்ளாளத்தெரு, புரசைவாக்கம், சென்னை (1907) பக்.7

(2.1)

## பின்னிணைப்பு (இ)

| முதலாயிரம் 10 பிரபந்தம் | இரண்டாமாயிரம் 3 பிரபந்தம் | மூன்றாமாயிரம் (இயற்பா) 10 பிரபந்தம் | நான்காமாயிரம் ஒரே பிரபந்தம் |
|---|---|---|---|
| 1. திருப்பல்லாண்டு – 12 | 1. பெரிய திருமொழி – 1084 | 1. முதல் திருவந்தாதி – 100 | 1. திருவாய் மொழி –1102 |
| 2. பெரியாழ்வார் | திருக்குறுந் | 2. இரண்டாம் | ---- |
| திருமொழி – 461 | 2. தாண்டகம் – 20 | திருவந்தாதி –100 | பாசுரங்கள் –1102 |
| 3. திருப்பாவை – 30 | 3. திருநெடுந்தாண்டகம்–30 | 3. மூன்றாம் திருவந்தாதி–100 | ---- |
| 4. நாச்சியார் | ---- | 4. நான்முகன் | |
| திருமொழி – 143 | பாசுரங்கள் – 1134 | திருவந்தாதி – 96 | |
| திருமொழி – 105 | ---- | 5. திருவிருத்தம் –100 | |
| 6. திருச்சந்த | | | |
| விருத்தம் – 120 | | 6. திருவாசிரியம் – 7 | |
| 7. திருமாலை – 45 | | 7. பெரிய திருவந்தாதி – 87 | |
| 8. திருபள்ளியெழுச்சி –10 | | 8. திருவெழுக் | |
| | | கூற்றிருக்கை – 1 | |
| 9. அமனாதிபிரான் – 10 | | 9. சிறிய திருமடல் – 77½ | |
| 10. கண்ணிநுண் | | | |
| சிறுத்தாம்பு – 11 | | 10. பெரியதிருமடல் – 148½ | |
| ------ | | ------ | |
| பாசுரங்கள் 947 | | பாசுரங்கள் – 817 | |

குறிப்பு: இத்தொகுப்பில் பாட்டு (பாசுரங்களின் தொகையை மூன்று வகையாகக் கூறுவர். சிறய திருமடல், பெரிய திருமடல் ஆகிய இரண்டைத்தவிர மற்ற நூல்களில் உள்ள பாட்டுகளின் மொத்த எண்ணிக்கை 3774. இக்கூட்டுத் தொகையில் யாருக்கும் கருத்து வேறுபாடு கிடையாது.

1. தமிழ் யாப்பிலக்கணத்தின்படி மேற்கண்ட இருமடல்களையும் தனித் தனிக் கலிவெண்பாவாகக் கொண்டு மொத்த எண்.3774 + 2 = 3776 என்பர்.

2. ஒவ்வொரு கண்ணியையும் ஒவ்வொரு பாட்டாகக் கொண்டு 2 மடல்களிலும் 77+ 148 = 226 பாட்டுகள் உள்ளன என்று கொண்டு மொத்தம் 3774+ 226= 4000 என்பர்.
(முடிச்சூர் அப்பாவு முதலியார் அப்பிள்ளை கருத்தையொட்டி, தாம் அச்சிட்ட நூலின் தொகை காட்டியுள்ளார்)

3. சிறிய திருமடலில் 40 பாட்டுகள், பெரிய திருமடலில் 78 பாட்டுகள் இருப்பதாகக் கொண்டு, இராமாநுச நூற்றந்தாதியின் 108 பாட்டுகளையும் கூட்டி 3774+ 40+ 78+ 108= 4000 என்பர்.

"947 பாசுரங்கள் உள்ளதை "முதல் ஆயிரம்" என்றும் 1134 (1084 20 30) பாசுரங்கள் உள்ளதை 2–ஆம் ஆயிரம் என்றும் சொல்வது போலவே 3776 பாசுரங்கள் அடங்கியதை 4000 என்பதில் தவறு இல்லை; கலிவெண்பாவின் கண்ணிகளைப் பாசுரங்களாக எண்ணி, 4000 என்று கணக்குக் காட்டி வேண்டிய அவசியம் இல்லை" என பதிப்பு ஆசிரியர்கள் கூறுவர்.

1. நாலாயிர திவ்வியப் பிரபந்த அகராதி பார்த்த சாரதி அய்யங்கார், தேவஸ்தான பத்திரிகை வெளியீடு, ஸ்ரீரங்கள்ம், 1963.

2. ஆழ்வார்கள் தமிழில் அக்காரங்கனி, தி.கி. நாராயண சாமி நாயுடு, கடலூர், 1975. (இ. சுந்தரமூர்த்தி தமிழ் இலக்கியக் கொள்கை, பதிப்பாசிரியர்கள் ச.வே. சுப்பிரமணியம் தா.வே. வீராசாமி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் அடையாறு சென்னை– 600 020, முதற்பதிப்பு 1975 – (பக்.183. 184)

# இணைப்பு (ஈ)

## நாலாயிரப் பிரபந்தத்தில் அடங்கிய செய்யுட்களின் தொகை விவரம் பின்வருமாறு

| | | | |
|---|---|---|---|
| 1. | பொய்கையார் | – | 100 |
| 2. | பூதத்தாழ்வார் | – | 100 |
| 3. | பேயாழ்வார் | – | 100 |
| 4. | திருமழிசையாழ்வார் | – | 216 |
| 5. | நம்மாழ்வார் | – | 1296 |
| 6. | மதுரகவியாழ்வார் | – | 11 |
| 7. | குலசேகராழ்வார் | – | 105 |
| 8. | பெரியாழ்வார் | – | 473 |
| 9. | ஆண்டாள் | – | 173 |
| 10. | தொண்டரடிப் பொடியாழ்வார் | – | 55 |
| 11. | திருமங்கையாழ்வார் | – | 1253 |
| 12. | திருவரங்கத்தமுதனார் | – | 108 |
| | ஆக | – | 4000 |

தமிழ் வரலாறு (பிற்பாகம் –முற்பகுதி) கே.எஸ். ஸ்ரீநிவாஸபிள்ளை; பக்.125

வெளியிட்டோர்:

கே.எஸ். கலியாண சுந்தரம் பிள்ளை & சன் சீனிவாசம் பிள்ளை ரோடு; தஞ்சாவூர்; 1960 மொத்த பக்.199)

# பின் இணைப்பு II (உ)

## (அ) இசைப்பாத் தொகுதிகள்

(1) முதலாயிரம்: இதிலடங்கிய பிரபந்தங்களும் அவற்றிலடங்கிய பாசுரங்களின் தொகையும்

| | | பாசுரத் தொகை |
|---|---|---|
| 1. | பெரியாழ்வார் திருமொழி | 473 |
| 2. | திருப்பாவை | 30 |
| 3. | நாச்சியார் திருமொழி | 143 |
| 4. | பெருமாள் திருமொழி | 105 |
| 5. | திருச்சந்த விருத்தம் | 120 |
| 6. | திருமாலை | 45 |
| 7. | திருப்பள்ளி எழுச்சி | 10 |
| 8. | அமலனாதிபிரான் | 10 |
| 9. | கண்ணிநுண் சிறுத்தாம்பு | 11 |
| | ஆக, பிரபந்தங்கள் 9-க்குப் பாசுரங்கள் | 947 |

(2) பெரியதிருமொழி: இதிலடங்கிய பிரபந்தங் களும் பாசுரங்களின் தொகையும்.

| | | பாசுரத் தொகை |
|---|---|---|
| 10. | பெரிய திருமொழி | 1084 |
| 11. | திருக்குறுந்தாண்டகம் | 20 |
| 12. | திருநெடுந்தாண்டகம் | 30 |
| | ஆக, பிரபந்தங்கள் 3-க்குப் பாசுரங்கள் | 1134 |

| | பிரபந்தம் | பாசுரத் தொகை |
|---|---|---|
| 13. | திருவாய்மொழி | 1102 |
| | ஆக, பிரபந்தம் 1-க்குப் பாசுரங்கள் | 1102 |

## (ஆ) இயற்பாத் தொகுதிகள்)

(4) இயற்பா: இதில் அடங்கிய பிரபந்தங்களும் பாசுரத்தொகையும்.

| பிரபந்தம் | பாசுரங்களின் தொகை |
|---|---|
| 14. முதல் திருவந்தாதி | 100 |
| 15. இரண்டாம் திருவந்தாதி | 100 |
| 16. மூன்றாம் திருவந்தாதி | 100 |
| 17. நான்முகத் திருவந்தாதி | 96 |
| 18. திருவிருத்தம் | 100 |
| 19. திருவாசிரியம் | 7 |
| 20. பெரிய வந்தாதி | 87 |
| 21. திருவெழுக் கூற்றிருக்கை | 1 |
| 22. சிறிய திருமடல் | 1 |
| 23. பெரிய திருமடல் | 1 |
| ஆக, பிரபந்தங்கள் 10–க்குப் பாசுரங்கள் | 593 |

(இதில் கண்டுள்ளபடி பிரபந்தங்கள் 23 என்பதும், பாசுரங்களின் மொத்த எண்ணிக்கை (947+ 1134+ 1102+ 593= 3776) என்பதும் புலனாகும்.

டாக்டர் ந. சுப்புரெட்டியார் – (10 வைணவ சமய நூல்கள் ) தெய்வத் தமிழ் பக்.396–7, பதிப்பாசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு, முதற்குறிப்பு :1975

